உ
சிவமயம்



50 வது வருட நிறைவு

# பொன்மலர்



## நாரந்தனை
## தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயம்

ஆவணி - 2008

சைவ மகா சபை நாரந்தனை
ஊர்காவற்றுறை.

உ
சக்தி துணை

நாரந்தனை பண்டாரபுலம் திருப்பதியில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும்

## தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலய

ஐம்பதாவது (50) வருட நிறைவு மலர்

*(1958 - 2008)*

# பொன்மலர்

ஆவணி – 2008



வெளியீடு:
சைவ மகா சபை,
நாரந்தனை,
ஊர்காவற்றுறை. (இலங்கை)
2008

உ
விநாயகர் துணை



திருச்சிற்றம்பலம்

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான் -- விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினாற்
கண்ணிற் பணிமின் கனிந்து

திருச்சிற்றம்பலம்

உ
சக்தி துணை

# மூலஸ்தான அம்பாள்



திருச்சிற்றம்பலம்
தாதாவைப் போலத் தண்ணளி கொடுப்பவள்
வேதாகமத்தின் மெய் ஞான மெய்ப்பொருள்
ஆதார சக்தி யரிய மனோன்மணி
மாதாவுன் பாதம் வைத்தேனென் சென்னியில்
திருச்சிற்றம்பலம்

உ
சக்தி துணை

# நாரந்தனை தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளின் சித்திரத் தேர்



உ
சக்தி துணை

தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளின் ஆரம்ப குடமுழுக்கு பிரதம குருவாகவும், மகோற்சவ குருவாகவும் சேவை புரிந்த

## சிவஸ்ரீ.கு.இராமநாதக்குருக்கள்



உ
சக்தி துணை

# சமர்ப்பணம்

"தனந்தரும் கல்வி தரும் ஒரு நாளும் தளர்வறியா
மனம் தரும் தெய்வ வடிவும் தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனம் தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனம் தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே"

தன்னை நாடி வரும் மெய்யடியார்களுக்குத் தனது கடைக்கண் பார்வையினாலேயே தனம், கல்வி, ஒரு நாளும் தளர்வறியா மனம், தெய்வ அழகு, நெஞ்சில் வஞ்சமில்லா இனம், மற்றும் நன்மைகள் அனைத்தையும் அருளுகின்றவளாகிய ஸ்ரீ மனோன்மணி அன்னைக்கு ஆலயம் அமைத்து, இவ்வாண்டு (ஆவணி 2008) ஐம்பது வருடங்கள் நிறைவு பெறுகின்றது. அதன் நிறைவாக அம்பிகையின் வரலாறு, அருளாட்சி யாவற்றையும் விபரித்து, இப்பொன்மலர் வெளியிடப்படுகின்றது.

இந்நன்னாளில் அம்பிகையை பூசித்து, சிந்திப்பவர்க்கெல்லாம் எளிதாக வந்து தண்ணளியைத் தர வேண்டுமெனப் பிரார்த்தித்து எம்மையெல்லாம் காத்தருளும் அன்னை மனோன்மணியின் திருப்பாதங்களில் இப்பொன்மலரினைச் சமர்ப்பிக்கின்றோம்.

**இம்மலரினை முகர்வதற்கு முன்.....**

இப்பொன் மலரில் ஆலயம் தொடர்பாகவும், சைவமகா சபை தொடர்பாகவும், வெளிவரும் விடயங்கள் தெரிந்தமட்டில் எழுதப்பட்டவையே. அவற்றில் ஆங்காங்கே தவறுகள், பிழைகள் ஏற்பட்டிருக்கலாம். தயவு செய்து குற்றம் பொறுத்திடுமாறு கேட்டுக் கொள்ளப்படுகின்றீர்கள்.

(குறிப்பு: பிழைகள், தவறுகள், திருத்தங்கள் இருப்பின் எமக்கு அறியத்தரவும்)

**வாசகர்களின் கவனத்துக்கு:**

இப்பொன்மலரில் வெளிவரும் விடயதானங்களில் உள்ள கருத்துக்கள், தந்துதவியவர்களின் எண்ணங்களே. அவர்களே பொறுப்பாளர்களாவர்.

உ
சக்தி துணை

நல்லை திருஞானசம்பந்தர்

நல்லை திருஞானசம்பந்தர்
ஆதீன முதல்வர்: ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள்
அருளிய

# அருளாசிச் செய்தி

அம்பிகை அடியார்களுக்கு,

நாரந்தனை ஊர்காவற்றுறை பதியில் தான்தோன்றியாக எழுந்தருளியிருந்து நீண்ட காலமாக இருந்து அருளாட்சிபுரியும் அம்பிகையினுடைய அருளை அனைவரும் பெற்றுக் கொள்ளும் வகையில் 50 ஆண்டுகள் கோயில் பணியை இன்று நினைவில் நிறுத்தும் வகையில் மலர் வெளியிடுவதை இட்டு மகிழ்ச்சி அடைகின்றோம். சைவ சமயத் தமிழ் மக்கள் சமய ஒழுக்கத்துடனும் பண்பாட்டு விழுமியங்களுடனும் நீண்டகாலமாக வாழ்ந்து வரும் ஊர்காவற்துறை பிரதேசம் பழமையான பெரும் ஆலயங்களை கொண்ட ஊராகும். இங்கு நாரந்தனை எனும் பதியில் தானாகவே தோன்றி ஊருக்கு அருள்புரியும் உலக மாதாவாகிய அன்னைபராசக்தி வேண்டுவார் வேண்டுவதை ஈயும் பொருட்டு மனோன்மணி அம்பிகையாக அருளாட்சி புரிகின்றாள்.

அன்னையை வழிபாடு செய்து அருள் நிலை பெற்ற அன்பர்கள் பலர் இந்நிலையை நிதர்சனப்படுத்தும் பொருட்டு பரிபாலன சபையினரும் சைவ மகாசபையும் இணைந்து 50 வருட ஆலய நிறைவை மலராக வெளியிடுவதை இட்டு அனைவரும் மகிழ்ச்சி அடைகின்றோம். ஆலயங்களின் வரலாறுகளை ஆவணப்படுத்த வேண்டிய பொறுப்பு நமக்கு உண்டு இதனை உணர்ந்து செயற்படும் பரிபாலன சபையினருக்கும் சைவமகா சபையினருக்கும் நன்றி கலந்த நல்வாழ்த்துக்கள் தொடர்ந்து வரும் காலங்களிலும் ஆலயப் பணிகளை நிறைவாக செய்து மக்கள் அனைவரும் மண்ணில் நல்ல வண்ணம் வாழ ஆலயம் நல்ல வழிகாட்டியாக அமைய வேண்டும். வெளிவரும் மலர் சிறப்பாக அமைந்து அனைவருக்கும் பயனுள்ளதாக அமைய மலராசியிறையும் இறைவன் ஆசீர்வதிக்க பிரார்த்திக்கின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்.

உ
சக்தி துணை

நாரந்தனை சைவமகாசபைத் தலைவர்
திரு.வே.துரைராசா
அவர்கள் வழங்கிய

# வாழ்த்துச் செய்தி

நாரந்தனைச் சைவ மகாசபையின் பரிபாலனத்தில் உள்ளது தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயம். உலக அன்னையாகிய மனோன்மணி தானே தோன்றிக் கோயில் கொண்டருளி ஐம்பது வருடங்கள் கடந்துள்ளமையை நினைவு கூர்ந்து பரவசமாகும் வகையில் வெளியிடப்படும் பொன்விழா மலருக்கு எனது வாழ்த்துக்களை வழங்குவதில் பெருமகிழ்ச்சியடைகின்றேன்.

ஐம்பது வருடங்களுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட சைவமகாசபை ஆற்றல் மிக்க நிர்வாகிகளால் வழிநடத்தப்பட்டு வளர்ச்சி கண்டது. அன்னைக்குக் கோயில் எடுத்துப் பராமரிக்கும் பணியுடன் மற்றும் சைவசமய வளர்ச்சிப் பணிகளிலும் ஈடுபட்டு வருகிறது. இச்சபையின் ஆற்றல் மிக்க நிர்வாகிகளின் அயரா முயற்சியால் வருடந்தோறும் அன்னையின் ஆலயத்தில் பல பணிகள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

இந்தப் பொன்விழா மலர் ஆலயம் சம்பந்தமாகவும் சைவமகா சபை சம்பந்தமானவையுமாகிய பல செய்திகளைத் தாங்கி வெளிவருகின்றது. ஆகவே இம்மலரின் முக்கியத்துவம் எதுவென்பதை நான் கூறவேண்டுமென்பதில்லை. வருங்காலச் சந்ததியினர் ஆலயத்தின் வரலாற்றையும் சைவமகாசபையின் பணிகளையும் அறிந்து கொள்வதற்கு இம்மலர் பெரிதும் உதவுமென்பதில் ஐயமில்லை.

எல்லாம் வல்ல தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளின் அருளால் இம்மலர் மலர்ந்து மணம் பரப்ப என் நல்வாழ்த்துக்களை வழங்கி அமைகின்றேன்.

நன்றி

வே.துரைராசா
தலைவர்.

சைவமகாசபை,
நாரந்தனை.



## அரச அதிபரின் வாழ்த்துரை

பழமையும் பெருமையும் பண்பாட்டுச் சிறப்புக்களும் ஒருங்கிணைந்த ஊர்காவற்றுறை வாழ் மக்கள் ஆன்மீகத்திலும் அளவிலா ஈடுபாடு கொண்டவர்கள் என்பதற்க்கு அங்குள்ள கோயில்கள் சான்றாய் அமைகின்றன. ஊர்காவற்றுறை நாரந்தனை வடக்கு பண்டாரபுலம் எனும் திருப்பதியில் தான்தோன்றியாய் எழுந்தருளி அவ்வூர் மக்களுக்கு அளவிலா அருள் சுரந்து வரும் அன்னை தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் காட்டிய அற்புதங்களை நினைந்துருகி சைவ மகா சபையினரும், பரிபாலன சபையினரும் இணைந்து பொன்விழா மலராய், பொன்மலரை வெளியிடுகின்றனர். தான்தோன்றியாய் எழுந்து அடியார்க்கு அருள் செய்யும் ஸ்ரீ மனோன்மணி அம்பாளின் மாண்பு என்றும் நிலைத்திருக்க, நினைவிருக்கவேண்டுமெனும் உயர்நோக்கில் வெளியிடப்படும் இம்மலர் நாளைய சந்ததிக்கு நல்லதொரு ஆவணப்படுத்தலாய் அமையும் என்பதில் ஐயமில்லை பதினொரு நாட்களாய் சிறப்புற நடைபெறும் அம்பாளின் மஹோற்சவ காலத்தில் மாண்புடன் வெளியிடப்படும் இப் பொன்மலர் அம்பாளின் அற்புதங்களை அவனிக்கு உணர்த்திடும் வகையில் சிறப்புற மிளிர்ந்திட அன்னையவள் தாள் வணங்கி, வாழ்த்துகின்றேன்.

**க. கணேஷ்,**

அரசாங்க அதிபர்/மாவட்டச் செயலர்,
யாழ்ப்பாணம்.

உ
சக்தி துணை



செயலாளர் அவர்களின்

# எண்ணத்தில்....
# பொன்மலர்

"நம்பினோர் கெடுவதில்லை நான்கு மறை தீர்ப்பு
அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்"

இது அமரகவி பாரதியாரின் வாக்கு. அன்னை பராசக்தியின் அருட் செயல்களை வியந்து பாடிய வாக்கு. அம்பிகையின் அருட்திறன்களை உலகோர்க்கு உணர்த்தும் அருள்வாக்கு.

இந்த அடிப்படையில் தான் தோன்றியாக எழுந்தருளி, தாயாகி நின்று எம்மையெல்லாம் காத்து வரும் அன்னை மனோன்மணியின் அருட்செயல்கள் அளப்பல. நல்லன எல்லாம் நல்கி, நம்மை வழிநடத்தும் அன்னையின் அருட்பார்வை நம்மீது மட்டுமன்றி உலகின் பல பாகங்களிலும் வாழும் நம்மவர் அனைவர் மீதும் படிந்திருப்பதை உணர்கின்றோம்.

ஐம்பத்தேழு ஆண்டுகளுக்கு முன்னர் தான் தோன்றியாக காட்சி தந்த அன்னை, ஐம்பது வருடங்களுக்கு முன் ஆலயத்தில் எழுந்தருளிய மனோன்மணி அம்மையின் அருட்செயல்கள் நம் உள்ளங்களிலெல்லாம் பக்தி உணர்வினை, அவளைப் பணிந்திடத் தூண்டும் உணர்வினை, நாளும் பொழுதும் ஊட்டிய வண்ணமே உள்ளன. தேடியுனைச் சரணடைந்தோம் எனக் கூற வைக்கின்றன. இந்த உணர்வின் பிரதிபலிப்பாக உருவானதே இப்பொன்மலர்.

அன்னை மனோன்மணி அம்பாள் தோன்றிய வரலாற்றையும், ஆலயம் அமைந்த வரலாற்றையும், முதல் குடமுழுக்கு (கும்பாபிஷேகம்) நிகழ்ந்த சிறப்பையும், மற்றும் பல விடயங்களையும் அன்னையின் அருளாட்சியையும் அறிந்திட உதவும். ஒரு வரலாற்று ஆவணமாக இப்பொன்மலர் அமைந்துள்ளது.

நமது இன்றைய இளம் சமூகத்தினரும் வருங்கால சந்ததியினரும் இவ்வாலயத்தின் வரலாற்றை அறிந்திடவும், அன்னை மனோன்மணியின் அருட்செயல்களை உணர்ந்திடவும், வாழ்நாளெல்லாம் மறவாது அவளைத் துதித்திடவும் வழிசெய்யும் ஒரு முயற்சியே இதுவாகும்.

இம்முயற்சிக்குத் துணை புரிந்தோர் அனைவருக்கும் எம்நன்றி. பொன்மலர் சிறப்புற விடய தானங்களை அளித்தோருக்கும், இதனை வெளிக்கொணர உந்து சக்தியாக அமைந்தோருக்கும், சைவ மகா சபையினருக்கும் எம் இதயபூர்வமான நன்றி.

தான்தோன்றியாக எழுந்தருளிய அன்னை மனோன்மணியின் அருட்காட்சி நம் இதயமெலாம் நிறைந்திட ஐம்பது ஆண்டு நிறைவின் நினைவாக, அன்னையின் திருவடிகளில் இப்பொன்மலரைச் சமர்ப்பித்து மகிழ்கிறோம்.

**அன்னையின் அருட்பார்வை அனைவர்க்கும் கிட்டுவதாக.**

**நன்றி**

அன்புடன்
**சு.இராமலிங்கம்**
(மலர் ஆசிரியரும் சைவ மகா சபை செயலாளரும்)
நாரந்தனை.

உ
சக்தி துணை

சிவஸ்ரீ.இராம.ஸ்ரீதரக்குருக்கள்
அவர்களின்

# வாழ்த்துச் செய்தி

இலங்கையின் வடபால் ஊர்காவற்றுறைப் பகுதியில் நாரந்தனை வடக்கில் என்னுடைய ஆரம்பப் பணி தொடங்கிய புனித இடம் தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்மன் கோயில். இன்று 50 வது வருட நிறைவு கண்டு அபரி மித வளர்ச்சி அடைந்துள்ள இவ்அம்மன் பல புதுமையான அற்புதங்களைப் பலருக்கு காட்டியுள்ளது.

ஒரு சிறிய இடத்தில் இருந்து பெரும் கோயிலாக வருவதற்கு தெய்விக சக்தி ஒரு புறமும் பல அன்பர்களின் முழு அளவிலான ஈடுபாடும் ஒரு காரணமாகும்.

எனது சிறிய வயதில் சுமார் 15 வயதளவில் அம்பாளுக்கு அரும் பணியாற்றும் வாய்ப்பு கிட்டியது. அப்பணி 30 வருடங்களுக்கு மேலாக தொடர்ந்து வந்தது. நாட்டுச் சூழ்நிலை காரணமாக அவ்விடத்தை விட்டு இடம்பெயர்ந்து போனாலும் அம்மனது அழகும் அவள் அருளும் இன்னும் எமது மனதை விட்டு இடம் பெயரவில்லை.

அம்பாள் அருளால் இவ்வாலயத்தில் பல அருட்பூசை வழிபாடுகள், யாகவழிபாடுகள் நிறைவேற்றப்பட்டுள்ளன. எனது தந்தையார் பெரும் மதிப்பிற்குரிய சிவஸ்ரீ.இராமநாதக்குருக்கள் என எல்லோரும் போற்றும் அப்பெரியவரின் கையினால் முதன் முதல் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. அந்த அருட்சக்தி வளர்ந்து இரண்டாவது கும்பாபிஷேகமும் பின்பு நடைபெற்றது. சூழ்நிலை காரணமாக தொடர்ந்து பெரும் கும்பாபிஷேக நிகழ்வுகள் செய்ய முடியாவிட்டாலும் நித்திய பூசைகளும், மகோற்சவ விழாக்களும் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றன. பல காலத்திற்குப் பின்பு 2004 இல் மகோற்சவம் செய்யும் சந்தர்ப்பம் கிடைத்தது. இது அம்பாளின் அருள் தொடர்பைப் பெரிதும் எடுத்துக் காட்டுகின்றது. இன்று நாம் இலங்கையை விட்டு வெளிநாட்டில் வாழ்ந்தாலும் அங்கு நடைபெற்ற பல வழிபாட்டுக் கோலங்கள் எம் மனக்கண் முன் மிகவும் ஆழமாக நிற்கின்றது.

சண்டிஹோமம், இலட்ச அர்ச்சனை, ஸ்ரீ சக்கர பூசை போன்ற அருள் காட்சிகள் பல பெரியோர்களின் தலைமையில் நடந்தது. பேராசிரியர் கா.கைலாசநாதக்குருக்கள் சண்டி ஹோமத்தை ஆரம்பித்து வைத்தார்கள். யாழ்ப்பாணத்தில் ஸ்ரீ சக்கர பூசையை முதன் முதல் ஆரம்பித்து வைக்கப்பட்ட இடமாக தான்தோன்றி அம்மன் தேவஸ்தானத்தைக் குறிப்பிடலாம். இச்சக்தி பூசையை எமது தந்தையார் ஆரம்பித்து வைத்தார்கள். இலட்ச அர்ச்சனை போன்ற அர்ச்சனை வழிபாடுகளும் தொடர்ந்தும் இடம்பெற்று வந்தது. தை அமாவாசையில் அபிராமிப்பட்டர் விழா இங்கு ஆரம்பிக்கப்பட்டு பலகாலம் நடைபெற்று வந்தது. காலத்தின் கோலமாக பல அருட் கிரியைகள் தொடர்ந்து நிறைவேற்றாமல் போனாலும் தேர், தேர்முட்டி எனப் பல திருப்பணி வளர்ச்சிகளையும் கண்டுள்ளது. பல பரிவார மூர்த்திகளுடன் இவ்வாலயம் பொலிவு கண்டு விளங்கியது. விழாக்காலங்களில் பல பெரிய சிவாச்சாரியார்கள், நாதஸ்வர இசைக்கலைஞர்கள் பங்கு கொண்டுள்ளனர். நாதஸ்வர வித்துவான்களில் குறிப்பாக அளவெட்டி N.K. பத்மநாதன் போன்றவர்கள் அம்பாளின் அருள் வேண்டி அடிக்கடி வருவார்கள். இவ்வாறு பல அறிஞர்கள், கலைஞர்கள் ஒன்று கூடிச் சந்தித்த இடமாக அம்பாள் சந்நிதானம் விளங்கியது.

இவ்வாலயத்துடன் இருந்த எமது அன்பும் அருட்பணியும் அகலாது இருக்க வேண்டும் என அம்பாள் சித்தமாக இருந்தது. அதனால் எமது காணி வீடு அனைத்தையும் அம்பாள் தேவஸ்தானத்திற்கு அறக்கொடையாக கொடுப்பதில் அகம் மகிழ்ந்தோம். இன்றும் அவ்வாலயப் பணியாற்றும் அர்ச்சகருக்கு அவ்வீடு உதவியாக இருக்கிறது.

ஆலய 50வது வருட நிறைவு காணும் இவ்வாலயத்தின் வரலாற்றுப் பதிவாக மலர் வருவது பெரும் மகிழ்ச்சியைத் தருகின்றது. 50 வருட காலப்பகுதியில் பங்கு கொண்ட சிவாச்சாரியார்கள், நிர்வாகிகள், உபயகாரர்கள், தொண்டர்கள் எனப் பலவகை மக்களின் ஈடுபாடு போற்றுதற்குரியது. அம்பாள் அருள் ஊட்டம் உள்ளதாக இருந்ததால் இன்று வரையும் அம்பாளடியார்கள் எந்த நாட்டில் இருந்தாலும் அருட்பணியாற்றிக் கொண்டுதான் இருக்கிறார்கள். எல்லோருக்கும் தான்தோன்றி அம்பாள் அருள் கிடைக்கப் பிரார்த்தனை செய்வதுடன் இம்மலர் வெளியீட்டில் முழு மூச்சாக நிற்கும் மலர் குழுவினருக்கும் எனது வாழ்த்தையும் நன்றியையும் கூறுகின்றேன்.

நன்றி

இவ்வண்ணம்
சிவஸ்ரீ.இராம.ஸ்ரீதரக்குருக்கள்
இலண்டன்

உ
சக்தி துணை

பிரமஸ்ரீ.விஸ்வநாராயண சர்மா
அவர்களின்

# வாழ்த்துச் செய்தி

"எனை ஆண்டு கொள்ள இங்கு வந்த ஆதிசக்தி வாழ்கவே"

மேற்கூறிய பஜனைப் பாடல் வரிகள் ஒலித்ததும், கேட்டதும், இன்று யாம் பெற்ற யாவும் பெற்றுத் தந்த பேசும் அன்னையாம் அருள்மிகு – தான்தோன்றி மனோன்மணியம்பாள் ஆலய பஜனை மன்றத்தினர் இசைக்கும் பஜனையில் தான்.

தானாகவே தோன்றி கலியுகத்தில் பல அற்புதங்களை 20ம் நூற்றாண்டில் நிகழ்த்திய அன்னை ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயம் இன்று தனது 50 வது வருட நிறைவு விழாவை 2008ம் ஆண்டில் நிறைவு செய்கின்றது.

வடக்கு நாரந்தனை என்னும் ஊரினை நாடறியச் செய்த பெருமையுடைய இவ்வாலயம் இன்று உலகளாவிய ரீதியில் தன் மெய்யடியார்களை கொண்டுள்ளது. அன்னையின் பெருங்கருணையினால் பெருவாழ்வு வாழும் பெருமக்கள் தாம் எங்கு வாழ்ந்தாலும் தாயை மறவாது துயர் தோய்ந்த சூழலிலும் நித்திய, நைமித்திய விழாக்கள் சிறப்புடன் நடைபெற பெரும் பங்காற்றி வருவது கண்கூடு.

இன்று பொன்விழாக் காணும் இவ்வாலயம் ஆலய வரலாற்றுப் பின்னணியுடன் கூடிய ஓர் மலரினை வெளியிடுவது மகிழ்வைத் தருகின்றது. சக்தி வழிபாட்டில் ஆகமம் சார்ந்த நுணுக்கங்களை எனது இளவயதில் கற்றுக் கொள்ள வழியமைத்த அன்னையின் அருளும், ஆலய பிரதிஷ்டா குருவும், பிரதம குருவுமாகிய சிவாச்சாரிய பெருந்தகை சிவஸ்ரீ இராமநாதக்குருவின் ஆசியும், பொன்விழா மலரை வாடாத அருள் மலராக மிளிர வைக்கும் என வாழ்த்தியமைகின்றேன்.

அபிராமி அந்தாதி முற்றோதல் நிகழ்வினால் அருள் வளர்க்கும் அன்னையுடன் திருவருள் நலமெல்லாந்தர பிரார்த்திக்கின்றேன்.

சுபமஸ்து

பிரமஸ்ரீ.விஸ்வநாராயண சர்மா

உ
சக்தி துணை

இந்து சமய கலாசார அலுவல்கள்
திணைக்களப் பணிப்பாளர்
திருமதி.சாந்தி நாவுக்கரசன்

அவர்களின்

# வாழ்த்துச் செய்தி

உன்னருள் என்றும் நிலைபெற வேண்டும் நீ வருவாய் அம்மா
என் வாழ்வென்றும் உனைப் பெற வேண்டும் அருள் புரிவாய் அம்மா
ஏனென்று கேட்டு என்பசி தீர்ப்பாய் என்னன்னை நீ அம்மா
என் முகம் மலர நின்முகம் மலராய் மண் திருளாய் அம்மா.

கல்லான நெஞ்சையும் கனிய வைத்துத் தன்பால் ஈர்த்துக் கருணை மழை பொழிபவள் எங்கள் அம்பாள் ஆவாள்.

எவ்வுயிர்க்கும் தாயாகி இருப்பதனால் எல்லோரையும் மன்னித்து ஏற்றுக் கொள்கின்ற புனித ரட்சகியாகவும் துலங்குகின்றாள். எங்களை பெற்றெடுத்த தாய்க்கும் மேலாம் எமக்கு உற்ற துணை இவளே என்று மனதார நேயம் கொள்வதே மேலான கடமையாகும். இந்த உலகிற்கே, நாயகியான அன்னையின் கருணைக்காக, அவளை நினைந்துருகி வழிபாடு செய்வதால் எமது ஆன்மா உயர்ந்து நற்பேறுகளைப் பெற்றுவிடுமன்றோ!

இத்தகைய பெருமையினையுடைய எங்கள் அன்னை நாரந்தனை, ஊர்காவற்துறையில், தான்தோன்றியாக, ஸ்ரீ மனோன்மணியாக, எங்களை, இரட்சித்து வருகின்றாள். எமது காலத்தில், இந்த ஆலயம் தோன்றியமையும், அம்பாளுக்குப் பிரதிஷ்டை செய்தமையும் எமது தவப்பேறேயாகும்.

மேலும் அம்பிகைக்குப் பிரதிஷ்டை செய்து ஐம்பது வருடகால பூர்த்தியினையிட்டு அம்பாள் நினைவுமலர் ஒன்றினை வெளியிடவிருப்பது ஒரு சிறந்த அருட்பணியாகும்.

இம்மலர் சிறப்புற அமைந்திடவும், நாரந்தனை ஊர்காவற்துறை, சைவமகாசபையினரின் பணி சிறந்திடவும் எனது நல்வாழ்த்துக்கள்.

ஓம் சக்தி ஓம்

நன்றி

சாந்தி நாவுக்கரசன்
பணிப்பாளர்

உ
சக்தி துணை

தான் தோன்றி
ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலய குரு
அவர்களின்

# வாழ்த்துச் செய்தி

ஓம் ஸர்வே பவந்து ஸீ சின:!
ஸர்வே ஸந்து நிராமயா:!
ஸர்வே பத்ரானி பச்யந்து:!
மாகச்சித் துக்கபாக் பவேத்:!

எல்லாம் வல்ல அன்னையின் திருப்பாத விந்தைகளை வணங்கிக் கொண்டு,

சர்வலோக நாயகியாகவும் உலக மாதாவும் ஆகிய அன்னை பார்வதி இறைவனின் திருவிளையாடல்களை திருவருட்சக்தியாக இருந்து ஆட்சி புரிகின்றாள்.

நாரந்தனை பண்டாரபுலம் என்னும் திருப்பதிதனில் எழுந்தருளி நல்லருள் ஆட்சி புரிந்து கொண்டிருக்கும் தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அன்னையின் கும்பாபிஷேக 50 வது ஆண்டு நிறைவு சிறப்பு மலரினை வெளியிடுவதை இட்டு அக மகிழ்கின்றேன். அத்தோடு நின்று விடாது மேன்மேலும் ஆலயம் வளர்சசி அடைவதற்கு அடியவர்கள் உதவி புரிந்து கொள்ள வேண்டுமென்றும், இம்மலரில் சிறியேனும் ஆசியுரையினை வழங்குவதற்கு சந்தர்ப்பம் தந்த சைவ மகாசபையினருக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்வதோடு இம்மலர் சிறப்புற எனது நல்லாசிகளையும் அம்பிகையின் திருவருளையும் வேண்டி நிற்கின்றேன்.

நன்றி

சிவஸ்ரீ.ப.ஸ்ரீமயூரன்
ஆலய குரு
தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயம்.
நாரந்தனை.

உ
சக்தி துணை

ஊர்காவற்றுறை உதவி அரசாங்க அதிபர்
அவர்களின்

# வாழ்த்துச் செய்தி

எமது பிரிவில் நாராந்தனை பதியில் எழுந்தருளியிருக்கும் தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயம் தீவகப் பிரதேசத்தில் உள்ள அம்மன் ஆலயங்களுள் சிறந்த ஆலயமாக திகழ்வது யாவரும் அறிந்ததொன்றே.

அன்னையை நோக்கி தினந்தோறும் வருகை தருகின்ற பக்தர்களுக்கும் தீவினையால் வருந்துவோருக்கும் வாழ்வின்றி அநாதைகளாக தவிப்போருக்கும் அபயகரம் நீட்டி அருள்பாலிப்பவளே மனோன்மணி அம்பாள்.

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்ற ஆன்றோர் வாக்கிற்கிணங்க சைவத்தையும் தமிழையும் தமது இரு கண்களாக போற்றுபவர்கள் சைவப் பெருமக்களேயாவர். எமது பகுதியில் ஆலயங்களை மையமாக கொண்டே எமது சமூக மேம்பாடு, பண்பாட்டு வளர்ச்சி, ஆன்மீக மேம்பாடு என்பன நடைபெற்று வருகின்றன.

மேலும் ஆலயத்தின் வளர்ச்சிப் பாதையில் சிறப்பான முறையில் இளையோரின் ஆன்மீக வளர்ச்சிக்காக அறநெறிப் பாடசாலையும் இயங்கி வருவது குறிப்பிடத்தக்கதும் காலத்தின் தேவையும் கூட.

நாரந்தனை பதியில் தாயாக இருந்து அகிலத்தையெல்லாம் காத்து வருகின்ற ஸ்ரீ மனோண்மணி அம்பாள் குடியிருக்கும் ஆலயத்தின் 50 வருட நிறைவினை பூர்த்தி செய்து வெளியிடப்படும் மலருக்கு வாழ்த்துச் செய்தியினை வழங்குவதில் பெரும் மகிழ்ச்சியடைவதுடன் அம்பாளின் அருட்பார்வை எம்மண்ணுக்கும் மக்களுக்கும் கிடைக்க இறையருளை வேண்டி நிற்கிறேன்.

நன்றி

க.ஸ்ரீமோகனன்
உதவி அரசாங்க அதிபர்
தீவகம் வடக்கு
ஊர்காவற்றுறை.

உ
சக்தி துணை

வடமராட்சி தெற்கு- மேற்கு பிரதேச செயலாளர்
அவர்களின்

# வாழ்த்துச் செய்தி

நீரந்தனை வடக்கு ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயம் அமைக்கப்பட்டு ஐம்பது ஆண்டுகள் பூர்த்தியடைந்தமையிட்டு வெளியிடப்படும் சிறப்பு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் பெருமகிழ்ச்சியடைகின்றேன். எம்கிராம மக்களின் குல தெய்வமாக விளங்கிவரும் அன்னை மனோன்மணி எம்மக்களைக்காத்து சீரும் சிறப்புடனும் வாழ்வதற்கு வழிகாட்டி வருகின்றாள். இவ் அன்னையின் பாதக்கமலங்களை பணிந்தவர்கள் கல்வியிலும் பொருளாதாரத்திலும் உயர்ந்து உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் சிறப்பான நிலையில் இருப்பதனைக் காணமுடிகின்றது.

இக்கிராம மக்கள் எங்கு வாழ்ந்தாலும் ஊர்ப்பற்றினை ஏற்படுத்தி எமது பழைய வாழ்வின் நினைவலைகளை மீட்பதற்கு அடித்தளமாக இருப்பது இவ் ஆலயம். இவ் ஆலயத்தில் நடைபெறும் மகோற்சவ தினங்களில் பக்திப் பரவசத்துடன் நடைபெறும் அம்பாளின் நேர்த்திக் கடன்களை நினைக்கும் போது எம் நெஞ்சமெல்லாம் உருகி நிற்கின்றது. அன்னையானவள் வேண்டுவார்க்கு வேண்டுவன வழங்கும் ஆதிபராசக்தியாகவும் இவ் அகிலமதைக் காத்து நிற்கும் அகிலாண்டேஸ்வரியாகவும், எம் மக்களுக்கு உணவளித்துக் காக்கும் நாராயணியாகவும் விளங்கி வருகின்றாள்.

இவ்வுலகில் அன்னையின் பேரருளுக்கு ஈடுஇணை எதுவும் கிடையாது. காஞ்சியிலே காமாட்சியாகவும், காசியிலே விசாலாட்சியாகவும், மதுரையிலே மீனாட்சியாகவும், மாத்தளையிலே முத்துமாரியாகவும், நயினையிலே நாகபூசணியாகவும் எம்கிராம மக்களுக்கு மனோன்மணியாகவும் தோற்றமளித்து இவ்உலகினை ஆட்சி செய்து கொண்டிருப்பவள் அன்னையாகும்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர், கடலிலே மிதந்து வந்த திருச்சொரூபத்தினைக் கண்ட மக்கள் அதற்கு சிறிய ஆலயம் ஒன்றினை அமைத்து அம்பிகையினை வழிபட்டு வந்தனர். கிராம மக்களின் பங்களிப்புடன் இவ் ஆலயத்தின் கட்டுமானப் பணிகள் படிப்படியாக முன்னெடுக்கப்பட்டு இன்று வளர்ச்சி பெற்றிருப்பதனைக் காணமுடிகின்றது. நாட்டுச் சூழ்நிலை காரணமாக இக்கிராம மக்களில் பலர் நாட்டின் ஏனைய மாவட்டங்களிலும், வெளிநாடுகளிலும் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள்.

அம்பிகையை வழிபட்டு வந்த அனைவரும் அனைத்துச் செல்வங்களுடனும் வாழக்கூடிய சூழ்நிலையினை அன்னை ஏற்படுத்தியுள்ளாள். இது அன்னையின் அற்புதத்தினால் ஏற்பட்டதே அன்றி வேறு எதுவும் இல்லை. இம்மக்கள் தமது சொந்தக் கிராமத்திற்கு மீளவும் திரும்பி வந்து அன்னையின் அரவணைப்பில் சிறப்பான வாழ்வு வாழ அருள் புரிய வேண்டும் என்பதே அனைவரினதும் வேண்டுதலாக உள்ளது.

அலை கடலின் ஓரத்திலே குடியமர்ந்து எம்மக்களுக்கு அபயக்கரமளித்து ஆறுதலளித்து வரும் அன்னையின் பேரருளுக்கு ஈடுஇணை எதுவும் இல்லை. எம் காவல் தெய்வமாக எம்மை வாழ வைத்துக் கொண்டிருக்கும் அன்னையின் நிழலில் எம் மக்கள் நிரந்தர சமாதானத்துடனும் நிலையான மகிழ்ச்சியுடனும் சகல சௌபாக்கியங்களுடனும் பெருவாழ்வு வாழ அன்னையின் பாதங்களை பணிந்து நிற்கின்றேன்.

அன்னையே மனோன்மணி ஆதிபராசக்தி
அகிலமெல்லாம் போற்றும் தாயே
உன்னையே நம்பினோம் உன்னடி தொழுகிறோம்
உலகினை காப்பாய் நீயே
மண்ணிலே வாழ்கின்ற மக்களின் துயரெலாம்
மனம் கொண்டு தீர்ப்பாய் தாயே
மாசிலா அன்பினால் இவ்வையத்தை ஆட்கொண்டு
மகிழ்ச்சியை தருவாய் தேவி.

நன்றி

சி.சத்தியசீலன்
பிரதேச செயலாளர்,
கரவெட்டி.

உ
சக்தி துணை

திருகோணமலை உதவி பிரதேச செயலாளர்
அவர்களின்

# வாழ்த்துச் செய்தி

அகில உலகமெலாம் பரந்து வியாபித்து விளங்குவது இறைவனின் பரம்பொருள் சக்தியாகும். இச்சக்திக்கு உருவ நாமம் கொடுத்து வழிபடும் முறை இந்து மக்களிடையே பண்டைய காலம் தொட்டு நிலவி வந்துள்ளது.

இயற்கை சக்திகளினை தெய்வீகமாகப் போற்றி அவற்றிற்கு உருவம் கொடுத்து வழிபட்ட நிலையே சக்தி வழிபாட்டின் தொடக்கம் எனக் கூறலாம். இவ்வகையில் உலக மாதாவாக விளங்கும் அம்பிகை வழிபாடு மிகவும் பழமை வாய்ந்தது.

அபிராமி அந்தாதி என்கிற தோத்திரப் பாடலில் உள்ள

"பூத்தவளே புவனம் பதினான்கையும்

பூத்த வண்ணம் காத்தவளே" என்ற தெய்வ பணுவலிற்கு அமைவாக தீவகத்தின் கண்ணாக வீற்றிருக்கும் நாராந்தனையில் அமைந்திருக்கும் மனோன்மணி அம்மன் தானே தோன்றி அம்மனாக அமைந்திருந்து தனது திருவருட்சக்தியினால் அடியார்களுக்கு அருள் பாலித்து வருகின்றாள்.

பழமையும் பெருமையும் வாய்ந்த சைவமதத்தின் அடையாளமாக திகழ்பவை ஆலயங்கள். மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்கே அரிய பிறவியாகிய மானிடப்பிறவியை இறைவன் எமக்கு தந்துள்ளார்.

ஓர் ஆலயத்தை முறைப்படி அமைத்து விக்கிரகங்களை பிரதிஷ்டை செய்து மஹா கும்பாபிஷேகம், நித்திய உற்சவங்கள் நடாத்தி தரிசிப்பது மானிடப் பிறவியின் பலனே எனக் கூறல் மிகையாகாது.

சக்தி உபாசனைக்கு சிறப்பாக "சாக்த தந்திரங்கள்" கிரியைகளின் வழிகளைச் செம்மையாக எடுதது இயம்புகின்றன. இதன் விதிகளுக்கு உட்பட்டு எமது ஆலயத்திலும் அம்பிகைக்கு உற்சவங்கள் நித்திய பூசைகள் நடைபெற்று வருவது குறிப்பிடத்தக்கது.

இவ் ஆலயம் அமைக்கப் பெற்று பொன்விழாக் காலம் காணும் இக்காலம் வரை கோவில் நிர்வாகத்தை செவ்வனே திறம்பட ஆற்றி வந்த, வருகின்ற சைவ அன்பர்களினதும் அடியார்களினதும் உபயகாரர்களினதும் இறைபக்தியும் குருபக்தியும் போற்றுதற்குரியது. இங்ஙனம் அனைவரினதும் ஒத்துழைப்பாலும் முயற்சியாலும் 50 ஆண்டு கால வரலாறு அம்பாளின் சக்தியினாலும் திருவருட் துணை கொண்டு நிறைவெய்தி அடியார்கள் யாவரும் மனோன்மணி அம்பாளின் பேரருளினால் அருட்கடாட்சத்திற்கு பாத்திரமாகி திருவருள் பெறுவதற்கும் இம்மலர் அருள் மணம் கமழும் தெய்வீக மலராக மணம் பரப்பவும், எல்லாம் வல்ல அம்பாளின் பேரருளினால் எல்லோர்க்கும் அறிவு, சந்தானம், நோயின்மை, கல்வி, தனம் தான்யம், அழகு, புகழ், பெருமை, துணிவு, வாழ்நாள், வெற்றி முதலிய சகலதும் கிடைக்க வேண்டும் எனக் கூறி, அம்பாளின் திருப்பாதங்களை தொழுது எமது ஆத்மார்த்தமான வாழ்த்துக்களினை காணிக்கையாக்குகின்றேன்.

நன்றி

கோபாலபிள்ளை – நாகேஸ்வரன் (நாரந்தனை)
இலங்கை நிர்வாக சேவை.
உதவி பிரதேச செயலாளர்
தம்பலகமம்
திருகோணமலை.

உ
சக்தி துணை

சிவாகம கிரியா கலாபமணி சிவபூஜா
ரத்தினம் பிரதிஸ்டா சிரோன்மணி
சிவஸ்ரீ நவரத்தின பிரபுதேவாக்குருக்கள்
அவர்களின்

# ஆசிச் செய்தி

அகில உலகத்தையும் சிருஸ்டித்தும், அதில் வாழும் அனைத்து சீவராசிகளையும் பாதுகாப்பதற்காக மதுகைடபன் சும்ப நிசும்பன் சண்ட முண்டன், சாம்ரலோசன், ரக்தபீகன் மஹி ரோசுரன் போன்ற கொடிய அசுரர்களை எல்லாம் அழித்து அடியவர்களுக்கு அருள் சுரந்த அகிலாண்ட கோடி, பிரமாண்ட நாயகி, அன்னை மனோன்மணித்தாயானவள் தானாகவே தோன்றி அருள் கொடுத்த இடம் தான் நாரந்தனை எனும் குக்கிராமமாகும்.

ஊர்காவற்றுறை நகரை அண்டிய நாரந்தனை என்ற கடல் சார்ந்த பதியிலே தானாகவே அவதரித்து மக்களுக்கு அருள் காட்சி கொடுத்த அன்னை ஸ்ரீ மனோன்மணித் தாயாருக்கு அவ்வூர் மக்களால் ஆலயம் அமைக்கப்பட்டு விளம்பி வருடம் ஆவணி மாதம் சுவாதி நட்சத்திரத்தில் (1958.08.20) சிவஸ்ரீ.கு.இராமநாதக்குருக்கள் அவர்களால் குடமுழுக்குச் செய்து பெரும் சாந்தி பெற்றனர்.

இவ்வாலயத்தின் மகோற்சவகால பிரதம குருவாகப் பணிபுரியும் பேறு பெற்று, கடந்த சில வருடங்களாக பிரமோற்சவத்தை அடியேன் நடாத்தி வருகின்றேன்.

ஆலய கும்பாபிஷேகம் செய்து 50 ஆண்டு பூர்த்தி பொன்விழாவை சர்வதாரி வருடம் ஆவணி மாதம் சுவாதி நட்சத்திரத்திலே (2008.09.19) கொண்டாடுகிறார்கள். எம்பெருமாட்டியின் அருள் வரலாற்றை பெரியோர்கள் எல்லோரும் சேர்ந்து, இனிமேல் வரும் எல்லோரும் கற்று அறிந்து பெருமை பெற வேண்டும் என்ற பெருநோக்கோடு, அச்சு வாகனம் ஏற்றி, மலராக வெளியிடுகிறார்கள். பொன்விழா சிறப்புற நடைபெறுவதற்கும் மலர் வெளியீடும் சிறப்புற அமைவதற்கும், மலரை வெளியிடுவோர், இம்மலரை வாசித்து பயன்பெறுவோர் அனைவருக்கும் மனோன்மணி அம்பாளின் அருள்கிட்டவும், மங்களம் பெருகவும், நல்வாழ்வு கிட்டவும், அகிலாண்டேஸ்வரி தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளின் பாத கமலங்களை இறைஞ்சியும் பணிந்தும் மனமார்ந்த நல்லாசிகளை நல்குகிறேன்.

திருச்சிற்றம்பலம்

நன்றி

சிவாகம கிரியா கலாபமணி சிவபூஜா
ரத்தினம் பிரதிஸ்டா சிரோன்மணி
**சிவஸ்ரீ நவரத்தின பிரபுதேவாக்குருக்கள்**
(அகில இலங்கை சமாதான நீதிவான்
இளைப்பாறிய கட்டடத் தொழில் போதனாசிரியர்)
உரும்பிராய், அளவெட்டி.

உ
சக்தி துணை

வேலணை இலந்தைவனம்
விக்னேஸ்வரர் ஆலய பிரதமகுரு
சிவஸ்ரீ செல்வ விமலராஜக்குருக்கள்

அவர்களின்

# வாழ்த்துச் செய்தி

பெருக லாந்தவம் பேதமை தீரலாம்
திருக லாகிய சிந்தை திருந்தலாம்
பருக லாம்பர மாயதோர் ஆனந்தம்
மருக லானடி வாழ்த்தி வணங்கவே.

சக்தியின் கருணையே கருணை, அகிலலோக நாயகியாகிய சக்தியின் திருவருளே தம்மைச் சரணடைந்தவர்களையும் துதிப்பவர்களையும் துக்க சாகரத்திலிருந்தும் தூக்கியெடுத்து, இன்ப கடலில் ஆழ்த்தி எழில் கொடுத்து இம்மையில் சகல செல்வங்களையும், சீரிய நல்வாழ்வையும் கொடுத்து மறுமைக்கு ஈடேற்றச் செய்கின்றது. பூவுலகில் பிறந்த மக்கள் தாம் தாம் செய்த தீவினைகளை நீக்கி நல்வினைப் பயனை அடைந்து இஷ்ட சித்திகளைப் பெற்று உய்யும் பொருட்டு ஆலயங்களை அமைத்து விக்கிரகங்களை பிரதிஷ்டை செய்து நித்தியம், நைமித்தியம், காமியம் என்ற முறைகளில் கிரியை நெறிகளை வழுவாது செய்து வழிபாடுகளையும் செய்து சகல நன்மைகளையும் அதன் வாயிலாகப் பெறக் கூடியதாக அமைகிறது.

இப்படியான மகா கும்பாபிஷேகம் நிறைவு பெற்று ஐம்பதாவது ஆண்டு நிறைவு பெறுவது கண்டு தரிசிப்பது மகா புண்ணியமாகும். ஈழநாட்டின் சிகரமென விளங்கும் யாழ்ப்பாணத்தின் தீவகற்பமான ஊர்காவற்றுறை நாரந்தனை பண்டாரபுலம் எனும் பதியில் சீலமும் பக்தியும் பொலிவும் இப்புண்ணிய பூமியில் நாரந்தனை எனும் திவ்ய பதியில் அருள்பாலித்து வரும் ஸ்ரீ மனோன்மணி அம்பாளுக்கு மகா கும்பாபிஷேகம் நடைபெற்று ஐம்பதாவது ஆண்டு நிறைவு நாள் கொண்டாட எம்பெருமாட்டியுடைய திருவருள் கைகூடியுள்ளதை நினைத்து பெருமகிழ்ச்சியடைகிறேன்.

ஸ்ரீதேவியின் கண்டதேச வர்ணனை
கலெ ரேகாஸ்திஸ்ரோ கதிக மகசீதைக நிபுணே
விவாஹவ்யா நத்தப்ரகுண குணஸம்க் யாப்ரதிபுவ
விராஜந்தே நாநா விதமதுரராசாகரபுவாம்
தீரயாணாம் க்ராமாணாம் ஸ்திதி நியம ஸீமாந இவதே

அம்பாளின் கழுத்தில் உள்ள மூன்று ரேகைகள் விவாஹ காலத்தில் பரமேஸ்வரனால் கட்டப்பட்ட ஸரிக்ஷ்மமான சரடுகளால் முறுக்கப்பட்ட மாங்கல்ய ஸுத்ரம் மூன்று விதமான கயிறுகளை ஞாபகப்படுத்துவதாயும் ஷட்ஜம், மத்யமம், காந்தாரம் என்ற கரமங்களையுடைய சங்கீத சாஸ்திரத்தின் கதியிலும் 15 விதமான கமகத்திலும் 2 விதமான ரதத்திலும் தேவி மஹாஸமர்த்ததையாக இருந்து சங்கீத சாஸ்திரத்திற்கே பெருமையை தன் கண்ட ரேகை மூலம் வெளிப்படுத்துகிறாள். ஸாமுத்ரிகா லக்ஷண சாஸ்திரப்படி ஆண்களுக்கு நெற்றி பிரதேசத்தில் மூன்று ரேகைகளும் பெண்களுக்கு கழுத்திலும் இடுப்பிலும் மூன்று ரேகைகளும் காணப்பட்டால் பரமசௌபாக்கியத்தைக் குறிக்கும்.

இத்திருக்கோயில் திருப்பணிகள் அன்பர்கள் பலருடைய முயற்சியால் இனிது நிறைவு பெற்றுள்ளது. இதில் பங்கு பற்றும் எல்லோருக்கும் குருவருளும் திருவருளும் பெருகுவனவாகுக! பூரண திருத்தியுடன் பொலிவுறும் இவ்ஐம்பதாவது பூர்த்தி விழாவின் நாரந்தனை மக்கள் தொண்டர்கள் பரிபாலன சபையினர், தருமசீலர்கள் யாவருக்கும் எல்லாம் வல்ல எம்பெருமாட்டியுடைய திருவருளினால் சகல நலன்களும் கிடைத்து இனிது வாழ இறைவனை வேண்டி அருளாசி கூறுகின்றேன்.

**சுபமஸ்து**

**சிவஸ்ரீ செல்வ விமலராஜக்குருக்கள்**
வேலணை இலந்தைவனம் விக்னேஸ்வரர்
ஆலய பிரதமகுரு
சரவணை கதிர் வேலாயுத சுவாமி கோவில்

உ
சக்தி துணை

சிவஸ்ரீ.பா.வசந்தக்குருக்கள் B.A.
அவர்களின்

# வாழ்த்துச் செய்தி

நாரந்தனை தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்மன் கோயில் அருளாட்சி தொடங்கி ஐம்பது ஆண்டுகள் நிறைவு பெற்ற மகிழ்வுடன் மலர் ஒன்று வெளிவருவதையிட்டு பேருவகை அடைகிறோம். கிராமங்கள் தோறும் விளங்கும் ஆலயங்கள் அக்கிராமத்தின் இதயங்களாக போற்றப்படுகின்றன. அவ் இதயத்தெய்வங்களை அவ்வூர் சார்ந்த மக்கள் எங்கு சென்றாலும் மனதில் சுமந்து கொண்டு தான் செல்கிறார்கள். நாரந்தனை வடக்கு மனோன்மணி அம்மன் யாழ்ப்பாணப் பகுதியில் ஓர் எல்லைப் புறத்தில் இருந்தாலும் எல்லையில்லா அருளை அகிலம் எல்லாம் வழங்கி வருகிறாள்.

அம்பாளுக்கு ஆரம்ப கிரியைகளை நெறிமுறையுடன் செய்தவர். எங்களுடைய தாத்தாவாகிய இணுவில் சிவஸ்ரீ.கு.இராமநாதக்குருக்கள் ஆவார்கள். நித்திய நைமித்திய பூசை வழிபாடுகளை அவரைத் தொடர்ந்து எமது மாமா இராம ஸ்ரீதரக்குருக்கள் ஐயா அவர்கள் 30 வருடங்களுக்கு மேலாகப் பணிபுரிந்து வந்தார்கள். அம்பாளின் இயற்கை அழகிற்கு ஸ்ரீதரக்குருக்களின் அலங்கார அழகு மேலும் மெருகூட்டிவிடும் என்பதை அறியாத ஊர்காவற்றுறை மக்கள் இல்லை 'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி" என்ற அபிராமப் பட்டரின் ஆசைக்கு இலக்கணமாக இருப்பவள் தான் தோன்றி அம்பாள்.

எங்களது ஆரம்ப பூசையும் மனோன்மணி அம்பாள் ஆலயத்தில் தான் தொடங்கியது. இன்று நாடுவிட்டு வேறு நாட்டுக்குச் சென்றாலும் அம்பிகையின் உருவச் சிந்தனையை நாடாமல் நாம் இருக்க முடியாது.

தாத்தா அவர்களின் ஸ்ரீசக்கர பூசை செய்வதும் இணுவில் மகாதேவ வாத்தியார், தெல்லிப்பளை நாராயண சர்மா, அளவெட்டி சந்திரன் ஐயா போன்ற பலர் முன்னிலையில் நாமும் அப்பூசையில் சிறுவயதில் பங்கு கொண்ட ஞாபகம் நேற்று போல் இன்றும் உள்ளது. பூசை முடிய சுந்தரத்தார் பாடுகின்ற அபிராமிப்பாடலும் இன்னும் ஞாபகமாக உள்ளது.

பேராசிரியர் கா.கைலாசநாதக்குருக்கள் செய்த சண்டீஹோமம் அம்பாளின் அருள் பயிருக்கு மேலும் உரமிட்டது. இவ்வாறு பல பெரியவர்கள் வந்து பூசைகள் புரிந்த புனிதத்தலம் நாட்டுச் சூழ்நிலையால் நலிந்து போகாமல் இருக்க அக்கோயிலைச் சார்ந்த நிர்வாகிகள் ஊர்மக்கள் எடுத்துவரும் முயற்சியின் சிகரமாக இம்மலர் வெளிவருவது மகிழ்ச்சியைத் தருகிறது.

மனோன்மணி அம்பாள் அருள் அன்னை அடியார்கள் எல்லோர்க்கும் பரவ இம்மலர் வர வேண்டும் என வாழ்த்தி மலர் வெளியீட்டுக் குழுவினர் அனைவர்க்கும் பாராட்டையும் நன்றியையும் கூறுகிறோம்.

நன்றி

இங்ஙனம்
**பா.வசந்தகுருக்கள்**
சைவப்புலவர், சைவசித்தாந்தபண்டிதர்,
லண்டன்

உ
சக்தி துணை

சிவஸ்ரீ.இ.ஸ்கந்தராஜக்குருக்கள்
அவர்களின்

# ஆசிச் செய்தி

ஈழநாட்டின் யாழ்ப்பாணத்தின் கடலால் சூழப்பட்ட பகுதியில் தாயாக இருந்து அருள் பாலிக்கும் மனோன்மணி அம்பாளுக்கு (50) ஐம்பதாவது வருட சிறப்பு மலர் மலர்வது யாழ் மக்களுக்கும் நாரந்தனை மக்களுக்கும் வரப்பிரசாதமாகும். ஐம்பது வருடங்களுக்கு முன்னர் எனது தகப்பனார் சிவஸ்ரீ இராமநாதக்குருக்கள் அவர்களால் தான் தோன்றி மனோன்மணி அம்மன் என்று பெயர் சூட்டப்பட்டு பல கும்பாபிஷேகங்களைக் கடந்து இன்று ஐம்பதாவது பூர்த்தியைக் கண்டுள்ளது. அப்பாவின் வழித்தோன்றலில் 2008.07.24 ஹங்வெல்ல கொழும்பில் அங்காளப் பரமேஸ்வரி ஆலயம் என்னால் பெயர் சூட்டப்பட்டு கும்பாபிஷேகம் நடைபெற்றது.

எனது அண்ணன் ஸ்ரீதரக்குருக்கள் முப்பது ஆண்டுகள் அம்பாளுக்கு கும்பாபிஷேகக் குருக்களாகவும் திருவிழாக்களையும் அழகுபடுத்தி வந்துள்ளார். இப்பொழுது ஆலய பரிபாலன சபையினருக்கும் மலர் வெளியீட்டாளர்களுக்கும் மக்கள் எல்லோருக்கும் மனோன்மணி அம்பாளின் பேரருள் கிடைத்து நலம் பெற வேண்டி நிற்போம்.

நன்றி

இ.ஸ்கந்தராஜக்குருக்கள் பிரதம குருக்கள்
ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அம்மன் கோயில்
உக்குவத்த, அவிசாவளை.

உ
சக்தி துணை

சிவஸ்ரீ.இரத்தினஐயர் நாவேந்தசர்மா
அவர்களின்

# ஆசிச் செய்தி

சலதியுலகத்திற் சராசரங்களையீன்ற
தாயாகினாலெனக்குந் தாயல்லவோ?

என்கின்ற அபிராமிப்பட்டரின் அபிராமிப் பதிகத்திற்கிணங்க வடக்கு நாரந்தனைத் திருப்பதியிலே தானாகத் தோன்றி மக்களின் துன்பங்கள் துயரங்கள் துடைத்து அருட்கடாட்சத்தை வழங்கி வரும் அன்னை மனோன்மணி அவள். கடல் அலைகள் ஆர்ப்பரிக்க, தென்றலது தாலாட்ட, அலைமேல் வெண்ணிலா தவழ, அதன் ஒளி ஆதிமூலத்து அன்னையில் ஜொலிக்க அந்தப் பூரணையில் ஸ்ரீசக்ர ராஜசிம்ஹாசனேஸ்வரியைத் தரிசித்து, அடியவர்கள் பெற்ற இன்பங்கள் பலகோடி.

அங்கு அர்ச்சகராகப் பணிபுரிய எனக்குக் கிடைத்தது மகாபெரும்பாக்கியம்.

அங்கு கோயில் கொண்டு எழுந்தருளி அருள்பாலித்து வரும் அம்பாளுக்கு ஐம்பதாவது வருடப் பூர்த்தியினையொட்டி மணவாளக்கோலத்தினை சிறப்புற நடாத்தி வைக்கும் சைவமகா சபையினருக்கும் அம்பிகை அடியார்களும் என்றும் அன்னையின் அருட் கடாக்ஷத்தால் துன்பங்கள் துயரங்கள் நீங்கி பேரின்பப் பெருவாழ்வு வாழ அன்னையை வேண்டி நிற்போம்.

"ஆதி சக்தி தாயே எமை அருள் புரிந்து காப்பாய்"

நன்றி

இரத்தினஐயர் நாவேந்தசர்மா
நாரந்தனை.

உ
சக்தி துணை

இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்கள
அபிவிருத்தி உதவியாளர்

திரு.எஸ்.உதயபாலன்
அவர்களின்

# பாராட்டுச் செய்தி

யாழ்ப்பாண கலாச்சாரம் கந்தபுராண கலாச்சாரம் என்பதற்கு சிறப்புக் கூறுவதாக அமைவது தீவகப் பிரதேசம். கோயில் இல்லா ஊரிலே குடியிருக்க வேண்டாம் என்ற முதுமொழிக்கு இணங்க மிக நிறைவான ஆலயங்களைக் கொண்டு விளங்குவதும் எனில் வியப்பில்லை. சக்தி வழிபாடு சாந்த சமய வழிபாடாக விரிந்த நெறியாக விளங்கும் அதே நேரம் தாயாக விளங்கும் சக்தி அறுபத்திமூன்று சக்தி பீடங்களில் புவனேஸ்வரி பீடமாக விளங்கும் நயினை நாகபூசணி அம்மன் தீவகப் பிரதேசத்தின் மணி மகுடம்.

ஊர்காவற்றுறை ஊர்களுக்கெல்லாம் கோட்டையாக விளங்கியது. நாரந்தனை கிராமம் வடக்கெல்லையாக அலை விரிந்த கடல் விளங்குகின்றது. நெய்தல் நிலத்தில் கற்பார்களைக் கொண்டு பரந்து விரிந்த பிரதேசமாக விளங்குவது நாராந்தனை.

தான்தோன்றி அம்மன் அருளாட்சி புரியும் ஆலயம். ஆயிரத்தி தொளாயிரத்து ஐம்பத்தோராம் ஆண்டு சுயம்பு வடிவாக மறைபொருளாக விளங்கிய அன்னை உலகெல்லாம் உற்பவித்த பயனை பெறுதல் பொருட்டு தன்னை பார் விளங்க செய்தார். அம்பாள் அருட்கடாட்சத்தின் பொருட்டு உதயமாகியது சைவமகா சபை.

அம்பாளுக்கு 1958ம் ஆண்டு பிரதிஸ்டை செய்து மகா கும்பாபிஷேகம் செய்வித்து மூன்று வேளை பூசையும் மகோற்சவமும் அதன் சிறப்பான பணியும் மிக சிறப்பாக செய்து வருதல் இணைந்தது ஆலய பரிபாலன சபை.

அம்பிகை வெளிப்பட்டு ஐம்பது ஆண்டுகள் பூர்த்தி அதனை இளம் சமுதாயமும் அறிதற் பொருட்டு ஆவணப்படுத்தும் மலரின் வெளியீட்டு முயற்சிபாராட்டுக்குரியது.

எமது திணைக்களம் இந்த ஆண்டு (2008) ரூபா இரண்டு இலட்சம் வழங்கி அன்னையாள் பணிக்கு ஆக்கப்படுத்தியமையும் குறிப்பிடத்தக்கது.

திருக்கோயில்கள் மூலம் அறப்பணி வளர்ப்பதில் மட்டற்ற மகிழ்ச்சி திருக்கோயில்களை மதிக்கும் ஒரு பணி தொடரட்டும்.

நன்றி

எஸ்.உதயபாலன்
அபிவிருத்தி உதவியாளர்
(தீவகப் பிரதேசம்)
இந்து சமய கலாசார அலுவல்கள்
திணைக்களம்.
யாழ்ப்பாணம்.

# ஓர் வேண்டுகோள்

*"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்ற குறையை நீக்கி 1951ம் வருடம் பங்குனி மாதம் தான்தோன்றியாக எமது அம்மை ஸ்ரீ மனோன்மணி தீவகத்தின் ஊர்காவற்றுறை நாரந்தனை வடக்கு பண்டாரபுலத்தில் தான்தோன்றியாக காட்சி தந்தாள்.*

*1958ம் வருடம் ஆவணி மாதம் தான் தோன்றியாக காட்சி தந்த அம்பாள் நாரந்தனைவடக்கு பண்டாபபுலத்தில் கோவில் கொண்டெழுந்தருளினாள். அன்று தொட்டு இன்று வரை ஏதோ திருவிளையாடல்கள் பலவற்றை நாம் எமது வாழ்நாளில் கண்டோம். கண்டு கொண்டிருக்கிறோம். இது எல்லாம் அவளின் அற்புதங்கள் என்றே குறிப்பிட வேண்டும். எது எவ்வாறாயிருந்தாலும் நாம் அவளின் மகிமையையும் சிறப்பையும் சிந்திக்காதிருக்க முடியாது.*

*சில நூற்றாண்டுகட்கு முன்பாக படிப்படியாக எமது நாட்டில் அந்நியராகிய போர்த்துக்கேயராலும், ஒல்லாந்தரினாலும், சைவ ஆலயங்கள் தகர்த்தப்பட்டும் இடிக்கப்பட்டும் அழிக்கப்பட்டதாக வரலாறு கூறுகின்றது. இதுபோல் எமது வாழ்நாளிலும் ஏற்பட்ட இடம்பெயர்வில் இவ்வாறான துர்ப்பாக்கிய நிலைப்பாடுகள் ஏற்பட்டன. இவற்றிற்கெல்லாம் முகங்கொடுத்து இன்றும் கம்பீரமாக அருள் பாலிக்கும் எம் அம்மையின் பெருமையை சொல்லிலடக்கிக் கூறமுடியாது. இதை நாம் நன்கு சிந்திக்க வேண்டும். இது தான் இன்றைய நிலை.*

*நாம் அறிய தான் தோன்றியாகி, கோயில் கொண்டெழுந்தருளி ஐம்பது வருடங்கள் ஆகிய இவ்வேளையில், நாம் புலம் பெயர்ந்து எங்கு இருந்தாலும் ஒன்றை மனதில் கொள்ள வேண்டும். எமது பிறந்த இடம், எம்மை வாழ்வித்த இடத்தின் பெருமையை மனதில் கொண்டு எமது கிராமத்தின் வளர்ச்சியை என்றும் நாம் மறக்கக் கூடாது. எனவே புலம் பெயர்ந்து வாழும் நாரந்தனை கிராமத்தவர்கள் தாம் எங்கிருந்தாலும், தாம் பிறந்த கிராமத்தின் சிறப்பை கருத்திற் கொண்டு எமது கிராமத்தின் முன்னேற்றத்திற்கு குறிப்பாக ஸ்ரீ மனோன்மணி அம்மாள் ஆலயத்தின் வளர்ச்சிக்கு பரம்பரை பரம்பரையாக வேண்டிய உறுதுணையாக அமைய வேண்டும் என்ற வேண்டுகோளை முன்வைக்கிறேன். இஃது எதிர்காலத்தில் நிலைப் பெறவேண்டும். என்றென்றும் இதை நாம் கருத்திற் கொள்வோமாக. இதுவே எமது வேண்டுகோள்.*

அன்பன்
**மு.சபாநாதன்**
**(நீம் றைஸ்மில்)**
வவுனியா.

உ
சிவமயம்

**இலங்கை வடக்கு யாழ்ப்பாணம் ஊர்காவற்றுறை வடபுலம் நாரந்தனை தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயத்தின் ஐம்பதாவது ஆண்டின் நிறைவின் மனதின் நீங்காத நினைவுகள்**

*அபிராமி அந்தாதி*

*உதிக்கின்ற செங்கதிர் உச்சித்திலகம் உணர்வுடையோர்*
*மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை*
*துதிக்கின்ற மின்கொடி மென் கடிக்குங்கும தோயமென்ன*
*விதிக்கின்ற மேனி அபிராமி என்தன் விழித்துணையே.*

*ஸ்ரீ லலிதாம்பிகை தியானம்*

*ஸிந்தூராருண விக்ரகாம் த்ரிணயநாம் மாணிக்க மௌலிஸ்புரத்*
*தாராணாயக சேகராம் ஸ்மிதமுகிம் ஆபின வக்ஷோருகாம்*
*பாணிப்யாளிபுர்ண ரத்நக்சகரத்கோத் பலம்பிப்ரதிம்*
*சௌம்யாம் ரத்கடஸ்த ரக்தசரணாம் த்யாயேத்பராம்மம்பிகாம்*

*50 ஆவது ஆண்டு நிறைவை எய்தி இருக்கும் நாரந்தனை தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளின் அற்புதங்கள் ஆரம்பம் முதல் இன்றுவரை தொடர்ந்து செய்து கொண்டு தான் இருக்கின்றன.*

*ஆரம்பத்தில் நாரந்தனைக் கிராமத்தில் சிறுகுடும்பங்கள் வாழ்ந்த காலத்தில் கட்டிட வேலைகளுக்காக கற்பாறை உடைக்கின்ற வேளை; பெரிய ஒரு கற்பாறை உடைத்த போது அப்பாறைக்குள் சிறிய அழகான அம்மன் வடிவோடு ஒரு உருவம் எடுக்கப்பட்டது. அவ்வுருவமானது தங்கத்தினால் ஆனது. இதை எடுத்தவர்கள் அச்சிலையை தங்கள் வீட்டில் மறைத்து வைத்திருந்தார்கள். சில நாட்களில் அவர்களுக்கெல்லாம் அம்மன் வருத்தம் ஆரம்பித்து அவர்கள் அந்நோயின் வேதனை தாங்க முடியாமல் அவ்வூர் கிராமசேவகரிடம் நடந்த விபரங்களை சொல்லி அவ்வுருவச் சிலையை ஊரறிய ஒப்படைத்தார்கள். யாழ் அரச திணைக்களம் பொறுப்பேற்று பின்பு கொழும்பு திணைக்களத்திற்கு அனுப்பப்பட்டு கண்காட்சியகத்தில் இன்றும் பார்க்க காட்சி கொடுத்த வண்ணம் இருக்கிறாள். இது இருக்க நாரந்தனைக் கிராமத்தில் திரு.மு.கந்தையா என்பவருக்கு அம்பாளின் திருவருளால் அன்று இரவு கனவில் தோன்றி கடற்கரையின் சற்று தூரம் எனது ஐந்து தலையுடன் பொருந்திய நாகம் உள்ளது. அதை எடுத்து ஆலயம் ஒன்றை அமைத்துக் கொள் என்று கனவில் காட்டி அருளினாள். இதனால் கந்தையா ஊர்மக்களுக்கு இவற்றைச் சொல்லி ஊர்மக்களுடன் அருகாமையிலுள்ள கடற்கரைக்குச் சென்று கடலின் சிறுதூரத்தில் ஐந்து தலையுடன் நாகம் கடற்கற்களினால் ஆன உருவம் கண்டு எடுக்கப்பட்டது. அதனை அவ்வூர் மக்களும் கந்தையாவுமாக எடுத்து வந்து உரிய இடத்தில் சிறிய பந்தலிட்டு சிறிய ஆலயம் அமைத்து விளக்கு ஏற்றி வழிபட்டு வந்தார்கள். அந்த இடத்தில் அமைந்தமையால் தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் என்ற பெயர் அமைக்கப்பட்டு இன்றும் அந்த சிறப்பு பெயருடன் பெருமையுடன் சிறந்து விளங்கிக் கொண்டு இருக்கிறாள்.*

*1958 ஆண்டு ஆவணி மாதம் சிறிய கோவிலாக அமைத்து மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. இன்று பெரிய கோவிலாக அமைக்கப்பட்டு 50 வது வருடத்தை அடைந்த நிலையில் அழியாமல் பூசைகள் நடைபெற்றுக் கொண்டு இருப்பது பெருமைக்குரிய விடயமாக உள்ளது. உள்ள உணர்ச்சி ஏற்படுமளவிற்கு சக்தியை உண்டாக்கி இருக்கிறாள்.*

*இந்த ஆலயத்திற்கு ஆரம்ப காலம் பற்றுதல் வைத்து அரும்பாடுபட்டவர்கள் பலர் அவர்களில் அமரர் திரு.கணபதிப்பிள்ளை, அமரர் திரு.சோமசுந்தரம், அமரர் சிவாகமசிரோன்மணி சிவாச்சாரியார் இணுவில் இராமநாதக்குருக்கள்.*

*அமரர்.திரு.கந்தஞானி ஆசிரியர் இவர்கள் எல்லோரும் அம்மன் ஆலயத்தை கட்டியெழுப்ப பெரும்பாடுபட்டு பணியாற்றி ஆலயத்தை வளர்த்த பெரியோர்கள். பின்னர் அவர்களின் சந்ததிகள் பராமரித்துக் கொண்டு வந்தார்கள் சிவாச்சாரியார் இ.சிறிதரக்குருக்கள் பல காலங்கள் நித்திய நைமித்திய கிரிகைகள் எல்லாம் சிறப்பாகவும் செய்துவந்தார். அதேபோல மற்றவர்களும் ஆலய நிர்வாகத்தை திறமையாக செயலாற்றி வருகிறார்கள். இந்த ஆலயத்தில் வருடாவருடம் ஆவணி மாத பௌர்ணமி தினத்தை தீர்த்தத் திருவிழாவை முன்வைத்து பத்து நாட்கள் மகோற்சவம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. தேர்த்திருவிழா, தீர்த்தத்திருவிழா இரண்டு நாட்களும் அம்பாள் வெளி வீதிவலம் வருகின்ற போது சிறப்பு அம்சமாக அம்பாளின் கும்மி அடித்தல் கிராம நாட்டுக்கூத்து உடுக்கை வாத்தியத்துடன் பாட்டுப் பாடி ஆனந்தத்துடன் வருவார்கள். இவை இன்றும் தவறாமல் செய்து வருவது அந்த மனோன்மணி அம்மனின் அற்புதமாகும்.*

*விசேடமாக ஒவ்வொருமாத பௌர்ணமி தினத்தில் விசேட ஸ்ரீசக்கர பூசையும் லலிதா பாராயணம், அபிராமி அந்தாதி 101 பாடல்களும் பாராயணம் செய்யப்படுகின்றன. சிவராத்திரி, நவராத்திரி ஆடிப்பூரம், தை அமாவாசை ஆகிய விசேட தினங்களில் சிறப்பான பூஜைகள் நடைபெற்று வருகின்றன.*

*நாரந்தனை தான்தோன்றி அம்மனின் திருவருள் அனைவருக்கும் கிடைக்க 50ஆவது ஆண்டு நிறைவு அனைவருக்கும் மனஅமைதியும் சாந்தியும் கிடைக்க பிரார்த்தனை புரிவோமாக.*

*ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி*

*ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டமெல்லாம்*
*பூத்தாளை மாதுளம் பூ நிறத்தாளை புவி அடங்கக்*
*காத்தாளை அங்குச பாசாங்குசமும் கரும்பும் அங்கை*
*சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கு ஒரு தீங்கில்லையே.*

**திரு.இராமநாதக்குருக்கள் விஜயகுமாரக்குருக்கள்**
சிட்னி முருகன் கோயில்,
அவுஸ்ரேலியா.

பொன் மலர்

## பிள்ளையார் சுழி போடு

"உ" பிள்ளையார் சுழி. மக்களெல்லோரும் எதனையும் எழுதத் தொடங்கும் போது இந்தக் குறியை முதலில் போட்டு எழுத வேண்டுமென்னும் ஒரு நியதி வழக்கத்திலிருந்து வருகின்றது.

விக்கினமின்றி எந்தக் காரியமும் ஆகவேண்டும் என்னும் எண்ணத்துடன், பயபக்தியுடன் முதலில் போடும் குறி இது. இப்புனிதக்குறியின் ஆதி தெய்வம் விநாயகரேயாவார்.

உ
தேவி துணை

## பொன்விழாக்காணும் தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயம்

*ஊர்ச்சிறப்பு*

*மாங்கனியின் மூக்கு வடிவிலுள்ளது சிறப்பு மிகு லங்காபுரியின் வடகோடி யாழ்நகர். சைவம் தமிழ் இரண்டும் சமச்சீராக வளர்ந்து வரும் யாழப்பாண நகரின் பெருமைக்கு பெருமை சேர்ப்பன. குடாநாட்டினை பிரித்து ஓடும் யாழ் கடலேரியின் தென்மேற்கில் உள்ள சப்த (7) தீவுகளில் நிலப்பரப்பில் பெரிதான வேலணை, மண்டைதீவு, புங்குடுதீவு, நயினாதீவு, அனலதீவு, எழுவைதீவு, நெடுந்தீவு என்பனவாம். இவற்றுள் 64 சக்தி பீடங்களில் ஒன்றாகி, மணிபல்லவம், நாகதீபம் எனப்படும் நயினை நாகபூசணி அம்பாள் சுயம்பு மூர்த்தியாக (தான்தோன்றி) அருள் புரியும் ஆலயம் மிகவும் பிரசித்தி பெற்ற கோயில். அவ்வகையில் வேலணையின் வடமேல் திசையில் ஊர்காவற்றுறை என வழங்கும் நகரின் பக்கமாக அமைந்தது நாரந்தனை எனும் கிராமம். கடலேரியும் ஈச்சம் காடுமாக வரண்ட நெய்தல் நிலமாக இருந்த வடக்கு நாரந்தனையில் இன்றைக்கு 50 வருடங்கள் முன்னதாக நடந்த திருவருள் நிகழ்வுகள் அன்று பாலகர்களாக இருந்து இன்று முதியோராகவும் இளைஞர்களாகவும் வாழும் அனைவரின் மனத்திரையிலும் இன்றைய நாளில் நிழற்படமாக ஓடிக்கொண்டேயிருக்கும் ஐம்பது ஆண்டுகளின் முன் கடலேரியின் பக்கமாக முருகைக்கல் (Coral) ஐந்துதலை நாகம் (இன்றும் ஆலயத்தில் காணலாம்) மிகவும் பெரிய வடிவில் கரையொதுங்கியது. அன்று முதல் இன்று வரை நாரந்தனையின் வளர்ச்சியும் பெருமையும் வளர்ந்து கொண்டே போவது நிதர்சனமான உண்மை.*

*கோயில் சிறப்பு*

*ஏறத்தாள பன்னிரண்டுக்கு மேற்பட்ட மகோற்சவ கோயில்களைக் கொண்ட வேலணையின் வடபால் கடலேரியின் தென்கரையில் இருந்து சுமார் 100 மீற்றர்களில் கிழக்குப் பார்த்த கோயில் தான் அருள்மிகு அன்னை ஸ்ரீ தான்தோன்றியம்மன் ஆலயம். வெறுமனே வெறும் பொட்டல் வெளியாக சிறு மண்குடிசைகள் சில உள்ள கிராமம் இன்று பல பெரிய கல் வீடுகள், தோட்ட வெளிகள் என அம்பாள் ஆலயத்தைச் சுற்றி மக்கள் குடியிருப்புக்கள் இலங்கையின் புகழ் பூத்த ஆகம விற்பன்னர்களான அமரர்கள் சிவஸ்ரீ. இராமநாதகுருவும், நயினை ஸ்ரீ கைலாசநாதகுருவும் இணைந்து நடாத்திய மகாகும்பாபிஷேகம் (1958) பல சிறப்புக்கள் கொண்டது. அக்காலங்களில் மிகவும் கொடிய தொற்று நோய்களாக பேசப்படும் சைவசூரி எனப்படும் நோயினால் பக்தர்கள் கும்பாபிஷேகத்தை தரிசிக்க சுகாதாரப் பகுதியினால் தடை விதித்த போதும் விசேட அனுமதியின் பெயரில் மகா கும்பாபிஷேகம் நிறைவு பெற்றதும் யாவரும் அறிந்ததே.*

*மூர்த்திகளின் சிறப்பு*

*ஆகம லட்சணப்படி அழகுற அமைந்த நான்கு திருக்கரங்களுடன் கூடிய அன்னை ஸ்ரீ மனோன்மணியின் கருங்கல் திருமேனியின் அழகு வடிவம் அலங்காரங்களுடன் மனதில் பதிந்தால் மறையாதது. அன்னையின் முன் மகாமேரு ஸ்ரீ சக்கரம் அருள் கூட்டும் சாதனம் பிற்காலத்தில் ஸ்ரீ சக்கர பூசை முறைகளையும் லலிதா திரி சக்தி நாமங்களின் பெருமையையும் நான் கற்றிட வழி வகுத்த பெருமை அம்பாளையும் ஆசாரிய பெருமான் ஸ்ரீ இராமநாத குருக்களையுமே சாரும். (குருக்கள் அவர்கள் ஸ்ரீ சக்கர பூசையில் மிகவும் சிறப்புப் பெற்றவர் என அமரர் பேராசிரியர் கலாநிதி கா.கைலாசநாதகுருவால் பாராட்டப் பெற்றவர்) மூலவருக்கு சற்றும் பேரழகில் குறையாத உத்தவர் திருமேனி தங்க நிறத்தில் தகதக என மின்னும் பேரழகு வடிவம். பட்டரின் "அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி" என வாக்கினை மெய்ப்பிக்கும் நவராத்திரி நாயகி. அடியார்கள் மெய்தான் அரும்பி கண்ணீர் சொரிந்து வழிபடும் அன்னை இக்கோவிலின் பெரும் சொத்து. கூடவே கணபதி, கந்தன், பைரவர், திருக்குமாரர்களுடன் பூரண பொலிவுடன் தேரோடும் திருக்கோவில். அன்னை ஸ்ரீ மனோன்மணியின் மகோற்சவம் 10 நாட்கள், நவராத்திரி, பௌர்ணமி, தை அமாவாசை எனப் பல விழாக்களால் தினமும் மூன்று காலப் பூசைகளுடன் அருள் பெருக்கும் கோயில்.*

*பூசை திருப்பணிகள் சிறப்பு*

*கும்பாபிஷேக நாள் முதல் ஏறத்தாள 32 வருடங்கள் சிவஸ்ரீ ஸ்ரீதரக்குருக்களால் தினப்பூசையும் அவரது தந்தையார் சிவாகமக் கிரியா சிரோரத்தினம் சிவஸ்ரீ இராமநாதக்குருக்கள் (பிரதிஷ்டாகுரு) அவர்களால் நைமித்திய விழாக்களும் ஆகம முறையில் நடைபெற்ற கோயில்.*

*சிவஸ்ரீ.ஸ்ரீதரக்குருக்கள் (தற்பொழுது லண்டனில் குருவாக கடமை புரிபவர்) அவர்களின் கைவண்ணமும், வாய் வண்ணமும் மிகவும் இயல்பாகவே அவரிடம் அமைந்தவையாகும். அழகுக்கு அழகு செய்வது போல் அவரது அலங்காரம், இனிமையான குரலில் சொல்லும் மந்திரங்கள் இரண்டுமே அவரை அடியார்கள் மத்தியில் பெருமை பெற வைத்தன என்பதும், மிக உயர்ந்த விலையில் பட்டுச் சேலைகளை உபயமாகக் கொடுத்து அதனை அம்பாளுக்கு, ஸ்ரீதரஜயா கைகளினால் அணிவித்து ஆனந்தக் கண்ணீர் விடும் பெண்ணடியார் கூட்டம் இன்றும் என் நினைவில் நிழலாக ஓடுகிறது. நாட்டின் சூழ்நிலைகள் காரணமாக குருவுடன் அடியார்களும் வெளியிடங்களில் வாழ்ந்தாலும் அவர்களின் மூச்சும் பேச்சும் அம்பாள்தான்.*

*இக்கோயிலை சைவ மகாசபை என்னும் பெயரில் பரிபாலனம் செய்யும் குழுவினர் காலத்திற்குக் காலம் ஆலயப் பணிகளை செவ்வனே செய்து வருவதும் கண்கூடு. சித்திரத் தேர்த் திருப்பணி முடித்து (திருவிழா) தேரோட்டம் தொடங்கிய சிறப்பும் இக்கோயிலுக்கு உரியதேயாம்.*

*இன்று ஆண்டுகள் ஐம்பது ஆகும். அன்னையின் திருக்கோயில் உலகில் இயற்கை உள்ள வரை (சூரியசந்திரர்) நிலை பெற்று நின்று அருள் பெருக்கி அடியார் தம்குறை நீக்கி அருளவும், இப்பொன் விழா மலரில் என்னையும் தன் வரலாற்றில் ஒரு பகுதியை நினைவு கூரவும் வாய்ப்பளித்த அன்னை ஸ்ரீ மனோன்மணியின் பெருங்கருணைப் பாதமலர் சிரசிலேற்றி வணங்குகின்றேன். வாழ்த்துகின்றேன். அம்மா தாயே.*

*"என்னைப் போல் பாவியும் இல்லை. அதனை நீக்குவதில் உனக்கு சமான மானவரும் இல்லை.*

*இது நீ அறிந்த உண்மை. அதனால் எதனை நீ செய்ய வேண்டுமோ அதனைச் செய்" (ஆதிசங்கர்)*

என்றும் அன்னையின் அருள் நலமெல்லாந்தர இறைஞ்சும்
வேதாகம வித்தியா பூசணம்
**பிரமஸ்ரீ விஸ்வநாராயண சர்மா**

## வாழ்க்கைக்கு அவசியமான இரண்டு

| | | |
|---|---|---|
| வருவதும் போவதும் | - | இன்பம், துன்பம் |
| வந்தால் போகாதது | - | புகழ், பழி |
| போனால் வராதது | - | மானம், உயிர் |
| தானாக வருவது | - | இளமை, முதுமை |
| அடக்க முடியாதது | - | பசி, தாகம் |
| நம்மால் பிரிக்க முடியாதது | - | பந்தம், பாசம் |
| அழிவைத் தருவது | - | பொறாமை, கோபம் |
| எல்லோருக்கும் சமமானது | - | பிறப்பு, இறப்பு |

உ
அம்பாள் துணை

# உலகத்து நாயகியே எங்கள் குலதெய்வம்

*நாரந்தனைக் கிராமம், யாழ்ப்பாண குடா நாட்டுக்கு தென்மேற்காக எட்டு குறும் நிலப்பரப்பைக் கொண்ட தீவுப்பகுதி என அழைக்கப்படும் பிரதேசத்தின் வடக்கே யாழ்ப்பாண நீரேரியும், தெற்கே குறுங்கடலும், கிழக்கே யாழ்ப்பாண நீரேரியும், சரவணைக்கிராமமும், புளியங்கூடல் கிராமமும், மேற்கே கரம்பன் கிராமத்தையும், யாழ்ப்பாண நீரேரி ஆகியவற்றை எல்லைகளாகக் கொண்டதான, பன்னிரண்டு (12) சதுர கிலோ மீற்றர் நிலப்பரப்பையும், வடமேற்காக கடல் மட்டத்தில் இருந்து ஏறத்தாழ முப்பது (30) அடி உயரத்தில் தெற்கு நோக்கியும், கிழக்கு நோக்கியும் படிப்படியாக உயரம் குறைவடைந்து, ஏறத்தாழ இருபது (20) அடி உயரத்திலும் வடக்கு, வடமேற்குப் பகுதி சுண்ணாம்புக் கற்களும், வடக்கு வடகிழக்குப் பகுதி ஊரிமண் நிலமாகவும், மத்திய கிழக்கு மேற்கு நரை மண்ணாகவும், மத்தியில் களி மண்ணாகவும் கொண்ட வயல், தோட்ட நிலப்பரப்பையும், பனை, தென்னை, மரங்களையும் புல்தரை சமவெளியை உள்ளடக்கிய, கடல்வளம் கொண்ட கிராமம்.*

*இன்றைக்கு 57 வருடங்களுக்கு முன்பு நாரந்தனை வடக்கு பண்டாரபுலம் என்னும் இடத்தில் கல் அகழ்வு செய்த மக்களுக்கு இருபுறமும் யானை முகத்தோடு கூடிய கஜலட்சுமி விக்கிரகம் கிடைத்தது. இத்துடன் பழைய நாணயங்களும் கிடைத்தன. (தற்போது இந்த அம்பாள் விக்கிரகம் கொழும்பில் புதைபொருள் ஆராய்ச்சி நிலையத்தில் வைக்கப்பட்டுள்ளது) இது 1951ம் ஆண்டு பங்குனி மாதம் நடைபெற்றது. சோழர் காலத்து நாணயங்கள் கிடைத்தன. இதன் மூலம் இங்கு ஆதியிலே நாகர்கள் வாழ்ந்திருக்கிறார்கள் என்பதையும் அறியக்கூடியதாய் இருக்கின்றது.*

*அம்பிகை தோன்றிய சில மாதங்களின் பின் ஒரு பெரியவருக்கு கனவில் தோன்றி "நான் கடலில் இருக்கின்றேன் என்னைக் காண்பாய்" எனக் கூறியுள்ளாள். அதன்படி போய் பார்த்தவிடத்து முருகக்கல்லால் ஆன மூன்று தலையை உடைய நாக உருவத்தைக் கண்டனர். உடன் எடுத்து வந்து அம்பிகைக்கு போட்ட ஓலைக் குடிலில் வைத்து வணங்கலாயினர். நாரந்தனை கிராம மக்களின் முயற்சியால் 1958ம் ஆண்டு ஆவணி மாதம் 20ம் திகதி சுவாதி நட்சத்திரத்தில் மகா கும்பாபிஷேகம் தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளுக்கு செய்யப்பட்டது. கும்பாபிஷேக குருக்களாக சிவஸ்ரீ.கு.இராமநாதக்குருக்களும், நித்திய பூசகராக இ.ஸ்ரீதரசர்மா அவர்களும் இருந்து பூசைகளை கிரமமாக செய்து வந்தார்கள். தொடர்ந்து 1976ம் ஆண்டு புதிய சித்திரத் தேரில் வீதி உலா வந்து மக்களுக்கு அருளாட்சி செய்தார்.*

*மக்கள் செழிப்புடன் சைவமும், தமிழும் வளர்த்து வந்தார்கள். தொடர்ந்து நாட்டில் ஏற்பட்ட அசாதாரணமான சூழ்நிலையால் மக்கள் புலம் பெயர்ந்து நாட்டின் பல பாகங்களுக்கும், அயல் நாடுகளுக்கும் சென்ற நிலையில் மீண்டும் வந்த சுமுக நிலையில் ஆலயத்தின் பல திருப்பணி வேலைகள் செய்யப்பட்டு நித்திய பூசைகளையும், வருடாந்த மகோற்சவங்களையும் செய்து வருகிறார்கள்.*

*மக்கள் எங்கு சென்றாலும் தங்கள் குலதெய்வமான தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளை என்றும் நினைப்பவர்களாகவும் தேவையான திருப்பணி. திருவிழாக்களையும் செய்கின்றார்கள்.*

*இன்று ஆலயம் அமைக்கப்பட்டு கும்பாபிஷேகம் செய்து வணங்க முற்பட்டு 50 வருடங்கள் பூர்த்தியான நிலையில் இறை அன்பும், வழிபாடும் பெருகிவரும் போது தான், எமது மக்களின் வாழ்வும் வளமாகும் என்ற உண்மையை நாம் உணர்ந்து எல்லாம் வல்ல தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளின் பாதங்களில் பணிந்து வணங்குவோமாக.*

**திரு.தி.சுந்தரலிங்கம**
தலைவர்
ஊர்காவற்றுறை பலநோக்கு கூட்டுறவு சங்கம்
ஊர்காவற்றுறை.

உ
சிவமயம்

## தான் தோன்றியாகக் காட்சி தரும் மகாசக்தி

*ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டமெல்லாம்*
*பூத்தாளை மாதுளம் பூநிறத்தாளை புவிஅடங்கக்*
*காத்தாளை அங்குச பாசாங் குசமும் கரும்பும்அங்கை*
*சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழு வார்க்கொரு தீங்கு இல்லையே*

*(நாரந்தனை வடக்கு தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயத்தின் ஐம்பதாவது ஆண்டு பூர்த்தியாவதை முன்னிட்டு தொகுக்கப்பட்ட வரலாறு)*

பச்சைப் பசும் புல்வெளி பாயாக எங்கும் பரந்து விரிந்திருக்க, மரங்கள், மலர்கள் விதம் விதமாக பல வர்ணங்களில் பூத்துக் குலுங்க, இனிமையான இன்னிசையோடு அந்தப் புண்ணிய கடற்கரைக்கு அருகில் தான்தோன்றியாகத் தோன்றியவள் தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள். அம்பிகையானவள் அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி, சின்னம் சிறிய இடையில் சிவந்த பட்டுடுத்தி சிறு அழகிய பெண்போல் முத்து மாலையும், கன்னங்கரிய குழலும், கரும்பு வில்லும், பாசாங்குசமும் கையிலேந்தி ஆட்கொள்பவள். அடியவர்கள் அவளை அருகிருந்து.

*"நாயகி, நான்முகி, நாராயணி, கைநளின பஞ்சு*
*சாயகி, சாம்பவி, சங்கரி, சாமளை சாதி நச்சு*
*வாயகி, சூலினி, மாலினி, வாராகி என்று*
*ஆயகியாகி உடையாள் சரணம் அரன்நமக்கே"*

என்று பலவாறு அவள் பெயர் கூறிப் போற்றித் துதிக்க நாரந்தனை வடக்கு எனும் அழகிய கிராமத்தில், காஞ்சியில் காமாட்சி, மதுரையில் மீனாட்சி, காசியில் விசாலாட்சி என ஊர்மாறி, பெயர்மாறி, உருமாறி நிற்பவள் அவளையே தாயாக, உறவாக, சொந்தமாக, தெய்வமாக நம்பி வரும் அடியவர்களுக்கு காட்சி கொடுக்க, தான்தோன்றியாய் வந்துதித்தாள்.

நாரந்தனை வடக்கில் கடற்கரைக்கு அருகில் தமது அன்றாட பிழைப்பிற்காக கல்தோண்டும் போது உருவானவளே தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள். ஊர்மக்கள் இருவர் கல் தோண்டும் போது கற்பாறைக்குள் சில தங்க நாணயங்களும் அம்பாள் சிலையும் கண்டெடுக்கப்பட்டது. இவற்றை அறிந்த ஊர்மக்கள் அரச திணைக்களத்திடம் ஒப்படைத்து யாழ்ப்பாணம் நூதனசாலையில் காட்சிக்காக வைத்தார்கள்.

உலகெங்கும் விஸ்வரூபியாக, முக்கண்ணியாக, சிவசக்தியாக, அம்பிகையாக இருப்பவளை காட்சிப் பொருளாக நூதனசாலையில் வைக்க முடியுமா? அம்பிகையானவள் நாரந்தனைக்கு வந்ததே அக்கிராமத்தில் வாழும் மக்களுக்கு அருள்புரியும் பொருட்டே, சிவனின் இடப்பாகத்தில் இடம் பிடித்தவள், எல்லாவற்றிற்கும் மூலகாரணனும், முதல்வனும் ஆகிய விநாயகரையும், தகப்பனுக்கே பாடம் சொல்லிக் கொடுத்தவரும், சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து வந்தவருமான முருகப் பெருமானையும் பிள்ளைகளாகக் கொண்டவள். ஆதிஷேடனையே தனது பாயாகக் கொண்டு அதில் சயனித்துக் கொண்டிருக்கும் திருமாலைத் தமையனாகவும் கொண்டிருப்பவள் நூதனசாலையில் வெறும் காட்சிப் பொருளாகக் காட்சியளித்துக் கொண்டிருக்க முடியுமா?

இவை நடைபெற்று ஒரு சில மாதங்களில் திரு.மு.கந்தையா அவர்களின் கனவில் அம்பாள் தோன்றி தான் நாரந்தனைக் கடலில் இருப்பதாகக் கூற அவரும் வேறு சிலரும் கடலில் சென்று பார்த்த போது மூன்று தலைகளுடன் நாகபாம்புச் சிலை இருப்பதைக் கண்டார்கள். அவர்கள் உடனே அச்சிலையைப் பெயர்த்து எடுக்க முயற்சித்த போது ஒரு தலை உடைக்கப்பட்டு, இரண்டு தலைகளுடனான நாகபாம்புச் சிலை கரைக்கு கொண்டு வரப்பட்டது. அன்று தொடக்கம் கொட்டில் ஒன்று அமைக்கப்பட்டு அச்சிலைக்கு தினம்தோறும் திரு லோகநாதபிள்ளை அவர்கள் விளக்கேற்றி வந்ததுடன் அக்கிராம மக்களும் சென்று வழிபடத் தொடங்கினர்.

1954ம் ஆண்டில் அம்பாளுக்கு ஓர் கோயில் அமைக்க வேண்டுமென அவ்வூர் மக்களின் ஆலோசனைப்படி அத்திவாரம் வெட்டப்பட்டு அமரர் மூத்ததம்பி செல்லப்பா அவர்களால் சங்கு தாக்கப்பட்டு கட்டிட வேலைகள் ஆரம்பமாயின. அமரர் பண்டிதர் கணபதிப்பிள்ளை அவர்களின் முயற்சியினால் வட இலங்கையில் பிரசித்தி பெற்ற அமரர் சிவாகம சிரோமணி

பொன் மலர்

இராமநாதக்குருக்களின் உதவியுடன் கோயிலுக்குரிய விக்கிரகங்களான அம்பாள், பிள்ளையார், மற்றும் வைரவர் சிலைகள் பெறப்பட்டு கோயில் கட்டட வேலைகள் முடியும் வரை பண்டிதர் கணபதிப்பிள்ளை தற்காலிகமாக வாழ்ந்து வந்த யாழ்ப்பாணம் பிரவுண் வீதியிலமைந்துள்ள வீட்டில் வைக்கப்பட்டு நாரந்தனைக்கு கொண்டு செல்லும் வரை அவரது பிள்ளைகளினால் சாம்பிராணிப்புகை, தீபம் காட்டப்பட்டு வந்தது.

1958 ஆம் ஆண்டு அமரர் தில்லைநாதர் அவர்களின் தலைமையில் அமரர் சிவாகம சிரோன்மணி இராமநாதக்குருக்கள் அவர்களினால் அம்பாள் மூலஸ்தானத்தில் வைக்கப்பட்டு கும்பாபிஷேகம் இனிதே நடைபெற்றது. அன்று தொடக்கம் வெள்ளிக்கிழமைகளில் அமரர்.அருளம்பலம், அமரர்.சோமசுந்தரம், அமரர்.அமிர்தலிங்கம் ஆகியோரது தலைமையில் கூட்டுவழிபாடு அம்பாளின் பஜனைப் பாடல்களுடன் தவறாது நடைபெற்றதுடன் கூட்டுவழிபாட்டின் முடிவில் ஆலய அர்ச்சகர் வழங்கும் பிரசாதம் பல சிறுவர்களை தவறாது வெள்ளிக்கிழமைகளில் ஆலயத்திற்கு வரவழைத்தது ஆலயத்திற்கான கட்டிட வேலைகளுக்கு பல வழிகளிலும் பணம் சேகரிக்கப்பட்டது. அவற்றுள் சில:

ஊர் மக்களிடம் பிடி அரிசி சேகரித்தல்
விவசாயிகளிடம் ஆலயத்திற்கான புகையிலை, மிளகாய் சேகரித்தல்
கொழும்பு சென்று பிரபல வர்த்தகர்களிடம் பணம் சேகரித்தல்.
நேர்த்திக்கடனாக விடப்படும் ஆடு, எருது, கோழி போன்றவற்றை ஏலம் விடுதல்.

ஆரம்ப காலத்திலிருந்து நடைபெற்று வந்த ஒரு சில வழிபாடுகள்.

1952 இலிருந்து கும்பாபிஷேகம் நடைபெறும் வரை சித்திரா பௌர்ணமி தினத்தன்று நீர்க்கஞ்சி வழங்கப்பட்டு பின்னர் சித்திரைக்கஞ்சி வழங்கப்பட்டு வந்தமை.

1956 இலிருந்து ஒரு சிறு கொட்டகையில் நவராத்திரி வழிபாடு நடாத்தப்பட்டு தொடர்ந்து நவராத்திரி பூசையும் பின்னர் சிறப்பாக மகா மேருயந்திர பூசையும் (வட இலங்கையில் முதலாவதாக ஸ்ரீ சக்கர பூசை இங்கு தான் ஆரம்பிக்கப்பட்டது) நடைபெற்று வந்தமை.

திருவெம்பாவை வழிபாடு அதிகாலையில் இளைஞர்கள் வீதி தோறும் திருவெம்பாவை பாடி வந்தமை.

ஆலயத்திற்கு எழுந்தருளி அம்பாளை அமரர். திரு.கந்தஞானி அவர்கள் வழங்கியதிலிருந்து அலங்காரத் திருவிழாக்கள் நடைபெற்று பின்னர் கொடிதம்பம், சித்திரதேர் செய்யப்பட்டு வருடாந்தத் திருவிழாக்கள் நடைபெற்று வந்தன. ஆலயத்தில் அம்பாள் வீதி உலா வரும் போது அம்பாளுக்குப் பின்னால்

"கும்மி அடியுங்கள் கும்மி அடியுங்கள் கூடிக் கும்மி அடியுங்கடி
நம்மை ஆள வந்த தான்தோன்றி அம்பாளை நாடியே கும்மி அடியுங்கடி" என்ற பஜனைப் பாடலும்,

"நாரந்தனை நகர் நாடதடா
நம் மனோன்மணி அம்பாளை நாடுதடா"

என்ற பஜனைப் பாடலும் இன்றும் நினைவில் நிற்கின்றன.

அலங்காரத் திருவிழாவின் இறுதி நாளன்று அம்பாள் சிங்க வாகனத்தில் நாரந்தனைக் கடலுக்கு (நாகபாம்பு சிலை எடுக்கப்பட்ட இடத்திற்கு) தீர்த்தமாடச் செல்லும் காட்சி எவராலும் மறக்க முடியாதது.

இப்படிப்பட்ட மகாவல்லமை பொருந்திய மகாசக்தியும், அன்பும், கருணையும், அருளும், வடிவமாகக் கொண்ட நாரந்தனை தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளின் 50 வது ஆண்டு நிறைவு விழாவின் போது வருகை தரும் அடியவர்களுக்கு அம்பாள் நல்அருளையும். நல்மனச்சாந்தியையும், நல்சக்தியையும், நல்அமைதியையும் கொடுத்து இன்று போல் என்றென்றும் சீரும் சிறப்போடும், வளமோடும் வாழ அவள் அருள் வேண்டி நிற்போம்.

50வது ஆண்டு நிறைவு விழா இனிதே நடந்தேற நாராந்தனை தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பிகையின் தாள் பணிந்து அருள் வேண்டி அமைகின்றேன்.

"அம்பிகையைச் சரண்புகுந்தால் அதிக வரம் பெறலாம்"
ஓம் சக்தி! ஓம் சக்தி!! ஓம் சக்தி!!! ஓம் சக்தி!!!!

தொகுப்பு
**திருமதி.தங்கம்மா கணபதிப்பிள்ளையின் நினைவிலிருந்து**
**அவரது மக்கள் அவுஸ்திரேலியா.**

உ

சக்தி துணை

# திருவிழாக்களின் தத்துவங்கள்

நாடெங்கிலும் பல விதமான விழாக்கள் நடைபெறுகின்றன. எல்லா விழாக்களிலும் சிறந்த விழா ஆலயங்களில் நடைபெறுகின்ற விழாவே. ஆகையினாலே இவ்விழாவினைத் திருவிழா என்று அழைப்பார்கள்.

ஆலயங்களில் நடைபெறுகின்ற நாளாந்தப் பூசைகளில் ஏற்படும் குறைவுகளைத் தீர்க்கும் பொருட்டே திருவிழாக்கள் நடைபெறுகின்றன.

திருவிழாக்கள் பெரும் தத்துவங்களை உள்ளடக்கியுள்ளன. படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம்பெரும் தொழில்களை திருவிழாக்கள் குறிக்கின்றன.

திருமுளையிடுதல், காப்புக் கட்டுதல் என்பன படைத்தலைக் குறிக்கும். ஓம கருமங்களும் வாகனங்களும் காத்தலைக் குறிக்கும். வேட்டைத் திருவிழா, தேர்திருவிழா என்பன அழித்தலைக் காட்டும். தீர்த்தத் திருவிழா, கொடியிறக்கம், மௌனதிருவிழா என்பன மறைத்தலைக் காட்டும், ஊஞ்சல் சண்டேஸ்வரர் உற்சவம், ஆசாரியஉற்சவம் என்பன அருளலைக் குறிக்கும்.

ஆண்டவன் உயிர்கள் மேல் கொண்ட அளப்பரிய கருணையினால் கொடியேற்றுவித்து திருவிழா புரிந்து பக்குவமுள்ள ஆன்மாக்களை முத்தியிற் சேர்க்கின்றார். பொதுவாக நாம் நோக்குங்கால் திருவிழாக்களில் நடைபெறும் கிரியைகள் எல்லாம் நாட்டினை நன்கு வாழ்விக்கவே செயற்படுகின்றமை புலனாகின்றது.

முதலில் கிராமசாந்தி நடைபெறுகின்றது. அதனால் நோய் துன்பம் நீங்கி இலட்சுமி கரம் ஏற்படுகிறது. வாஸ்து சாந்தியினால் குற்றங்கள் நீங்குகின்றன. மிருத்சங்கிரகணம் என்பது முளைப்பாலிகைக்கு மண் எடுக்கும் கிரியை. பூமிதேவியை வணங்கி மண்வெட்டியையும் பூசித்த பின்னர் மண் எடுப்பார்கள். எல்லாம் தெய்வமயம் என்பது இதனால் விளங்குகின்றது.

முளையிடுதல் அங்குரார்ப்பணம் எனப்படும். முளையின் செழிப்பிலிருந்து நாட்டுக்கு நடக்கும் பலனை அறியலாம். தொடங்கும் காரியம் இடையூறு இன்றி முடித்தற்கு காப்புக் கட்டப்படும். குழந்தையின் நோய் நீங்க தாயானவள் மருந்து உண்பது போலவே, ஆன்மாக்களுக்கு பிறவித் துன்பத்தை நீக்கவே எம்பிரானுக்கு காப்புக் கட்டப்படுகிறது.

பேரிதாடனம் என்பது பறை அறைதல். மேளத்திலிருந்து நாதம் எழுகிறது. நாதம் சிவம் என்பர். நாதஒலி எல்லா உலகங்களுக்கும் உயிர்களுக்கும் நன்மை தருகிறது.

கொடியேற்றல் உயிர்களின் மல நீக்கத்தையும் சிவபதப்பேற்றையும் குறிக்கும். கொடிமரம் சிவம், கொடிச்சீலை உயிர், தெற்பைக் கயிறு பாசம், கொடிக்கயிறு சிவசக்தி, கொடியேற்றுதல் மும்மலப் பிணிப்பினால் பிறந்து இறந்து உழலும் உயிர்கள் முறைப்படி தீட்சை பெற்று மலம் நீங்கி இறைவனை அடைதலைக் குறிக்கும்.

சுவாமி வீதி வலம் வருதல் மூவுலகத்து உயிர்களையும் காத்தருளுவதையே குறிக்கும். யாகசாலையில் உள்ள சிவாக்கினியில் ஆகுதி செய்தல் ஆன்மாக்கள் தாம் செய்த கன்மங்களை அனுபவிக்காமல் சுத்தமாக்கும் பாவனையாகும். இத்தகைய உண்மைகளை உணர்ந்து இறைவனைத் திருவிழாக்காலங்களில் நம் சிந்தையில் இருத்தி வணங்குதல் நம்மவர் கடனாகும்.

**சிவஸ்ரீ.கோ.சிவகாந்தன்**
நாரந்தனை.

உ
சிவமயம்

# சுந்தரர் கயிலாயம் சேர்தல்

தலம் - மலைநாடு திருஅஞ்சைக்களம் பண் - இந்தளம்

*திருச்சிற்றம்பலம்*

*தலைக்குத் தலைமாலை அணிந்த தென்னே*
*சடைமேற் கங்கை வெள்ளம் தரித்த தென்னே*
*அலைக்கும் புலித்தோல் கொண்ட சைத்த தென்னே*
*அதன்மேற் கருநாகக் கச்சார்த்த தென்னே*
*மலைக்குந் நிகர் ஒப்பனவன் திரைகள்*
*வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்*
*டலைக்குங் கடலங் கரைமேல் மகோனாத*
*அணியார் பொழில் அஞ் சைக்களத் தப்பனே*
*திருச்சிற்றம்பலம்*

*சுவாமி:- அஞ்சைக்களத்தப்பர் தேவி - உமையம்மை*

*மேற்படி தேவாரம் சுந்தரமூர்த்திசுவாமிகளால் பாடியருளப்பட்டது. இவ்வாறு தேவாரம் பாடி திருஅஞ்சைக்களம் திருக்கோவிலை வலம் வந்து சிவனை பக்திபூர்வமாக வழிபட்டார். இத்திருப்பதிகத்தில் "வெறுத்தேன் மனை வாழ்க்கையை விட்டொழிந்தேன். இனி என்னை அவ்வுலகத்துக்கு அழைக்கும்படி கயிலாயநாதனை வேண்டினார். உடனே சக்தி தேவியுடன் இருக்கும் சிவபெருமான் சுந்தரரது வேண்டுகோளை உணர்ந்தார். நம் ஊரனை தெய்வ யானை மீது உடனே அழைத்து வாருங்கள் என்று பிரமா முதலிய தேவர்களுக்கு அருள் செய்தார். கயிலைநாதன். தேவர்களும் அப்பணியை ஏற்றுவெள்ளை யானையைக் கொண்டு திருவஞ்சைக்களத்துக் கோயிலுக்குச் சென்று கோயிலின் வாசலில் கால் நிலத்தில் படும்படி (தேவர்கள் கால் நிலத்தில் படுவதில்லை, கண் இமைப்பதில்லை) சுந்தரரைக் காத்து நின்றனர். சுந்தரர் தரிசனம் முடிந்து வெளிவருதலும் தேவர்கள் அவரை எதிர்கொண்டு வணங்கி சிவபெருமான் இந்த யானையில் ஏற்றி அழைத்து வருமாறு திருவருள் செய்துள்ளார் என்றார்கள்.*

*இது இறைவன் ஆணையாதலால் சுந்தரர் எண்ணம் வேறொன்று இல்லாமல் இறைவன் ஆணையை ஏற்றார்.*

*ஏற்றுக் கொண்ட சுந்தரரை தேவர்கள் வலம் வந்து வணங்கி, வெள்ளை யானையில் ஏற்றுதலும் யானை கயிலாய நகரம் நோக்கி நகரத் தொடங்கிவிட்டது. வேதம் ஆகமம் தோத்திரம் ஆகிய ஒலிகள் சேர்ந்து இசைக்கவும் பஞ்சதுந்துபிகளின் ஓசைகளும் விண் எல்லாம் எதிர்ந்து இசைத்தன. தேவர்கள் பூ மழை சொரிந்தனர்.*

*சுந்தரர் கயிலை நோக்கிச் செல்லும் வேளை எவரையும் நினைக்கவில்லை. தனது துணைவியாரான பரவையார் சங்கிலியார் ஆகியோரைக் கூட நினைக்கவேயில்லை. மறந்தேவிட்டார். அது இலௌகீக வாழ்க்கை இப்போ தேவையில்லை.*

*அவர் அண்மையில் சந்தித்த நண்பன் தோழன் சிவனடியான் சேரமான் பெருமாள் நாயனார் (சேர நாட்டு அரசன்) ஒருவரையே நினைத்தார்.*

*சேரமான் சிறந்த சிவபக்தன் எப்போதும் சிவபூசை செய்பவர். தில்லைக் கூத்தனின் சிலம்பொலி*

கேட்பவர். ஒரு முறை சிதம்பரத்துக்கு வந்தார். தில்லைக் கூத்தை நேரில் பார்த்துத் தரிசனம் செய்வதற்கு அங்கு நடராசனைப் பணிந்து "பொன் வண்ணத்து அந்தாதி" பாடி தில்லைக் கூத்தையும் பார்த்து மகிழ்ந்தார்.

சுந்தரர் திருவாரூரில் இருக்கிறார் என்று அறிந்து சுந்தரர் வீட்டுக்குச் சென்றார். அங்கு சுந்தரரும் அடியவர்களும் அவரை வரவேற்றனர். சேரரும் சுந்தரரும் ஒருவரை ஒருவர் வணங்கித் தழுவினர். இருவரும் கோயிலை அடைந்து வணங்கினர். சேரர் "திருவாரூர் நான் மணிமாலை" பாடித் துதித்தார்.

சில நாள் சுவாமி தரிசனம் செய்து பரவையார் மாளிகையில் விருந்தினராக அமர்ந்திருந்தார். பின்னர் சேரமானும் சுந்தரரும் பல சிவத்தலங்கள் சென்று வழிபட்டு, பாண்டி நாட்டுக்கு வந்தனர். அவர்கள் வரவறிந்து பாண்டி நாட்டு மன்னரும் அவர் மகளை மணந்திருந்த சோழ நாட்டு அரசனும் அவர்களை அதி விமரிசையாக வரவேற்று வணங்கி, திருவாலவாய்ப் பெருமானை வழிபடச் செய்து அரண்மனையில் விருந்தினராகப் போற்றினர். அந்நாளில் மூவேந்தரும் சேர்ந்து பாண்டி நாட்டுத் தலங்களைத் தரிசித்தனர். திருஞானசம்பந்தர் காலத்திலும் வளவர்கோன் (சோழன்) பாவை மங்கையர்க்கரசியாரை பாண்டியன் திருமணம் செய்து வாழ்ந்திருந்தான். அப்படி மூவேந்தரும் கலப்பு மணம் தான்.

பாண்டி நாட்டில் சேரரும் சுந்தரரும் தங்கியிருந்த போது கேதீச்சரம் எனும் நம் நாட்டுத் திருத்தலத்தை மானசீகமாக வழிபட்டனர். "நத்தார்ப்படை ஞானன் பசு" என்னும் திருப்பதிகத்தைத் துதி செய்து பாடினார். சுந்தரர் சேரர் அதனைக் கேட்டு மகிழ்ந்தார். அப்பதிகத்தில் "வங்கம் (கப்பல்) மலிகின்ற கடல் மாதோட்டம்" என்றும் "வால் நத்துறு (வெண்சங்கு) மலிகின்ற கடல் மாதோட்டம்" என்றும் "தெங்கம் பொழில் சூழ்ந்த மாதோட்டம்" என்றும் பாடி பெரிய வெளிநாட்டுத்துறைமுகமாக மாதோட்டத்தைக் காட்டியிருக்கிறார் சுந்தரர்.

ஊனத்துறு நோய்கள் அடியார் மேல் ஒழித்தருளி
அங்கத்துறு நோய்கள் அடியார் மேல் ஒழித்தருளி
தேவன் எனை ஆள்வான்" என்று இறைவன் திருவருளைச் சிறப்பித்தும்
பாவம் வினை அறுப்பார் பயில் பாலாவி" என்றும் தீர்த்தச் சிறப்பையும் பாடியிருக்கிறார் சுந்தரர்.

சம்பந்தர் பாடியதையும் இவ்விடத்தில் நினைவு கூரத்தக்கது.

கருதுகின்ற கேதீச்சரம் கைதொழக்
கடுவினையடையாவே" என்றும்

"தொண்டர் நாள் தோறும் துதி செய்ய அருள் செய் கேதீச்சரம்" என்றும் கேதீச்சரநாதனது அருளை வியந்து பாடியிருக்கிறார் சம்பந்தப்பெருமான்.

பின்னர் சேரரும் சுந்தரரும் பாண்டி நாட்டிலிருந்து திரும்பி சோழ நாட்டில் உள்ள திருவாரூருக்குச் சென்று பின்னர் அங்கிருந்து சேரருடைய வேண்டுகோளுக்கு இணங்கி சுந்தரரும் சேரருடன் சேர்ந்து சேர நாட்டுக்குப் புறப்பட்டனர். வழியில் முதலையுண்ட பாலகனை உயிரோடு மீட்டார் சுந்தரர்.

அவர்கள் வரவை அறிந்த சேரநாட்டு மந்திரி மாரும் மக்களும் நகரை அலங்காரம் செய்து அரச வரிசைகளோடு சென்று வணங்கி வரவேற்றனர். பின்னர் இருவரும் சென்று திருவஞ்சைக்களத்துப் பெருமானைத் தரிசித்து வணங்கி மீண்டனர்.

அதன்பின் சுந்தரமூர்த்தி நாயனாரை அலங்கரித்த யானை மேல் ஏற்றி அமரச் செய்து அரசன் பின்னால் ஏறி இருந்து வெண்கொற்றக்குடை பிடித்தும் சாமரை விசிப் பணி செய்து

பவனியாக அரண்மனைக்கு அழைத்து வந்தார். அரசர் அமரும் சிங்காசனத்தில் சுந்தரரை அமரச் செய்து பாதங்களைப் பணிந்தார். பணியாளர்கள் பூசனைப் பொருட்களை எடுத்து வர அரசர் பாத பூசை செய்யத் தொடங்கினார். அவருடைய பாதங்களை தன் கையினாலே பற்றி நீர் வார்த்துக் கழுவத் தொடங்கினார். சுந்தரர் பாதங்களைப் பின்னே இழுத்து "இப்படி நீர் செய்தல் தகாது" என்றார். அரசரோ "நான் அன்பின் மேலீட்டால் செய்யும் பூசையை மறுக்காது ஏற்று அருளுக என்று வேண்டி பூசை செய்தார்.

அளவற்ற அன்புக்கும் அரச திருவுக்கும் ஏற்றவாறு பெரும் பூசை செய்து விருந்தளித்து இன்புற்று இருந்தனர். செம்பொன்னும் நவமணியும் காசும் தூசும் (பட்டு) பொழிந்தார். பின்னர் இருவரும் திருவாரூருக்குச் சென்று திரும்பினர். பின் சுந்தரர் திருவஞ்சைக்களத்துத் திருக்கோயிலுக்குச் சென்று வழிபட்டிருந்தார்.

ஒரு நாள் சேரமான் யானை மீதேறி பரிவாரங்களோடு நகர் வலம் வரும் போது ஒரு நபர் உடம்பெல்லாம் திருநீறு பூசி வருமாப் போலே தோளில் பொதியோடு எதிரே வந்து கொண்டிருந்தார். உடனே மன்னன் திடீரென யானையை விட்டிறங்கி அவனைக் கும்பிட்டார். முன்வந்தவன் நடுநடுங்கி "அடிவண்ணான் நான்! மழை பெய்து பொதியில் உள்ள உவர் மண் கரைந்து வெள்ளையாகி விட்டேன்" என்றான். சேரபிரானும், "அடிச்சேரன் அடியேன்" என்று "திருநீற்றின் வாரவேடம் நினைப்பித்தீர் வருந்தாதே ஏகும்" என மொழிந்தான். இந்த மன்னனுக்கு வேறு இரண்டு பெயர்களும் உண்டு. கழறிற்றறிவார், பெருமாக்கோதையார் அவையாகும்.

இப்படிப்பட்ட பெருந்தகையை சேரமான் பெருமானை நண்பனை தோழனை தனக்குப் பாதபூசை செய்த அடியவனை பிரியும் பொழுது சுந்தரரால் மறக்க முடியுமா! நினைத்தார். சேரமான் உடனடியாக உணர்ந்து கொண்டார். பக்கத்தில் நின்ற தனது குதிரையைப் பிடித்து ஏறினார். உடனே பாய்ந்து சென்றார் திருவஞ்சைக்களத்துக்கு. அங்கே சுந்தரர் யானையில் ஏறி விண்நோக்கிச் செல்கிறார் தேவர்களோடு. உடனே சிவமந்திரத்தை திருவைந்தெழுத்தை குதிரையின் காதிலே ஓதினார். உடனே குதிரை பாய்ந்தடித்துக் கொண்டு யானையை நோக்கி ஓடி யானையை முட்டி யானையைச் சுற்றி வலம் வந்து யானை முன் சேவித்துச் சென்றது. அரசன் மகிழ்ச்சி அடைந்து முன் சேவித்துச் சென்றான். சேரனுடன் வந்த படையினரும் சுந்தரரின் கோவில் அடியார்களும் தாங்கள் மேல் நோக்கிச் செல்ல இயலாமல் கண்ணுக்கு தெரியும் வரை நின்று பார்த்துவிட்டுத் தம்மிடங்களுக்குத் திரும்பிச் சென்றனர்.

யானை மேல் கொண்டு செல்கின்ற பொழுதினால் தேவர் குழாம் என்றும் தானை (சேனை) முன் செல்ல "தானெனை முன் படைத்தான்" என்னும் தமிழ் மாலையைப் பாடிக் கொண்டு செல்கின்றார். சுந்தரர் அதில் தான் உலக வாழ்க்கையில் ஈடுபட்டு மகிழ்ந்து இருந்ததையும் அப்படியிருந்தும் இறைவன் தன்னை தேவர்களை அனுப்பி யானை மீது மீட்டெடுப்பதையும் நினைந்து உருகி பாடிக்கொண்டு செல்கின்றார். அவற்றுன் சில வரிகளைப் பார்ப்போம்.

"மந்திரம் ஒன்றறியேன்

மனை வாழ்க்கை மகிழ்ந்தடியேன்" சுந்தர வேடங்களால் துரிசே செயும் தொண்டன் என்னை" அழகான யானையையும் தேவர்களையும் அனுப்பி ஏற்றுக் கொண்டானே என்கின்றார் சுந்தரர்.

மேலும்

பண்: பஞ்சமம்.

அரவொலி ஆகமங்கள் அறிவார் அறி தோத்திரங்கள்
விரவிய வேத ஒலி விண்ணெலாம் வந்து எதிர்ந்திசைப்ப
வரமலி வாணன் வந்து வழி தந்து எனக் கேறுவதோர்
சிரமலி யானை தந்தான் நொபித்தான் மலை உத்தமனே"

வரமலி - வரங்களை அள்ளித் தருகின்ற
வாணன் - அம்பலவாணன், சிவன்
சிரமலியானை - தலைமை யானை, வெள்ளை யானை

*ஏனைய யானைகள் கரி, கறுப்பு, கொடித்தான் மலை கயிலை மலை, உத்தமன் - சிவன் பரமேஸ்வரன் இப்பதிகம் கயிலைமலை சிவனை பரமேஸ்வரனை நோக்கிப் பாடியது தேவி பெயர் - பார்வதி.*

*அடுத்த செய்யுள்.*

இந்திரன் மால் பிரமன் எழிலார் மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ள என்னை மத்தயானை அருள் புரிந்து
மந்திரமா முனிவர் இவனாரென எம்பெருமான் - நந்தமா
ஊரன் என்றான் நொடித்தான் மலை உத்தமனே
மால் - திருமால், எழிலார் - அழகான
வந்து - எதிர்கொள்ள என்னை - வந்து என்னை ஏற்றுக் கொள்
மந்திரமா முனிவருக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

*இவன் ஆர்! வெள்ளை யானை மேல் ஏறிப் போகிறானே! தேவர்கள் புடைசூழப் போகிறானே! இப்படி ஒரு சீவனும் பூவுலகில் இருந்து தேவலோகம் நோக்கிப் போகவில்லையே! நூதனமாக இருக்கிறதே இவன் யார்? என்று மூக்கிலே கை வைத்து யோசிக்கிறார்கள். "சரி சிவபெருமானையே கேட்டு விடுவோமே இந்தச் சீவன் யாரென்று கேட்டார்கள் கேட்டுவிட்டார்கள். "நமது ஊரவன் தான்" என்றான் எம்பெருமான். இந்த நிகழ்ச்சியை ஞானத்தால் உணர்ந்து பாடுகிறார் நம்பியாருரர்.*

*பதிகம் பாடி முடிய திருமலையின் தென்திசை வாசல் சென்று அடைந்தனர். பின்னர் யானை, குதிரையின் நின்று இறங்கி கொஞ்சத் தூரம் நடந்து சென்று மணிவாயில் அடைந்தனர். சேரர் தடையுண்டு நின்றார். நாவலூர்க்காவலர் நண்ணினார் அண்ணலார் திருமுன்பு, கண்ணுதலார் திருமுன்பு, தாழ்ந்து வீழ்ந்து எழுந்து தூரத்தே விட்ட கன்று, தாய்ப்பசுவைக் கண்டு விரைந்து அணைந்தது போல, காதலினால் விரைந்து எய்தி, நின்று போற்றிய தனித்தொண்டரை (வன்தொண்டரை) "ஊரனே வந்தனையோ" என்றார் உலகுய்ய.*

*இப்பூவுலகத்து மக்கள் உய்வதற்கு திருத்தொண்டர்புராணம், (பெரியபுராணம்), சேக்கிழார் சுவாமிகள் பாடுவதற்குச் சுந்தரர் திருத்தொண்டர்த்தொகை பாடி, அறுபத்து மூன்று தனியடியார்களையும் ஒன்பது தொகை அடியார்களையும் அறிமுகப்படுத்தித் (தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன் என்றும் திருப்பதிகம்) கொடுத்தார். அதற்காகவும் தான் ஆலாலசுந்தரர் பூவுலகம் போய் அவதரித்தவராம். அதனால் தான் "உலகு உய்ய' என்றார் நேரிழை வலப்பாகத்தார் "அடியனேன் பிழை பொறுத்தெனை ஆண்டு கொண்டது என்ன நின் பெருங் கருணை! என்று ஆனந்த வெள்ளத்துள் திழைத்தார் வன்தொண்டர். பின்னர் வன்தொண்டர் "நீரணி வேணிய, நின்மலர்கழல் சார சேரனார் மணிவாயில் புறத்தே நிற்கிறார் என்றார்.*

*உடனே வேணியர் அழைப்பித்து புன்முறுவல் செய்து "இங்கு நாம் அழையாது நீ எய்தியது என்ன" என அருள் செய்தார்.*

*அரசன் அஞ்சலி கூப்பி நின்று அடியனேன் ஆருரர் கழல் போற்றி எனது குதிரையை யானை முன் சேவித்து வந்தனன். பொழியும் உங்கள் கருணை வெள்ளமும் உங்கள் திருமுன்பு கொண்டு வந்து சேர்த்தது என்று சொன்னான். இன்னொரு விண்ணப்பம் உங்கள் மேல் அன்பால் திருவுலாப்புறம் பாடினேன். கேட்டருள வேண்டும் என்றான் அரசன். ஈசருக்குப் பாட்டு என்றால் போதும் "பாடுக" என்றார். மன்னன் பாடக் கேட்டு இன்புற்றார்.*

*"நீங்கள் இருவீரும் கணங்களுக்குத் தலைமை தாங்கி இருக்கவும் என்று அருள் செய்தார்.*

பின்னர் வன்தொண்டர் ஆலால சுந்தரராகி முன்னைய நல்வினைத் தொழில்தனில் நின்றனர். சேரர் பிரானும் நன்மை சேர் கணநாதராய் அவர் செயும் நயப்புறுதொழில் பூண்டார்.

சுந்தரரின் பூவுலகப் பெரும் துணைவியர் பரவையாரும் சங்கிலியாரும் வல்வினை தொடர்பு அற நாயகி அருளாலே கமலினியும் அனிந்ததையுமாகி முன்னைய தொழில் வழி நின்றனர். அதாவது மலர் கொய்து மாலை தொடுத்து, கயிலை நாயகருக்கும் நாயகிக்கும் சாத்தி வணங்கி வந்தனர்.

ஆலால சுந்தரரும் வழியினில் அருள் செய்த ஏழிசை திருப்பதிகம் பூவுலகோர் ஏற்றிட ஆழிகடலரையன் வருணன் மூலம் திருவஞ்சைக்களத்து அப்பருக்கு அனுப்பப்பட்டது. சேரர் காவலர் பாடிய திருவுலாப்புறம் பாரினில் ஓதுவார் பாடிட பாருக்கு அனுப்பப்பட்டது.

இது ஒரு தெய்வீகக் கட்டுரை

இதனை பொருளுணர்ந்து, கருத்து விளங்கிப் படிப்போர், கேட்போர், எழுதுவோர் அச்சிடுவோர் யாபேரும் பாசவினையை அறுத்துத் பரகதி அடைவார்கள். அடைவர்களாகுக.

சுந்தரர் கயிலை சேர்ந்த தினம் ஆடி மாதம் சுவாதி நட்சத்திரம்.

இவர் காலம் கி.பி.807 - 825

இப்போ இருப்பது - 100 பதிகம்

நன்றி, வணக்கம்.

திருச்சிற்றம்பலம்

ஆதார நூல்கள்:

1. சேக்கிழார் - திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணம்)
2. சுந்தரர் - தேவாரம்

திரு.செ.இராசதுரை அவர்கள்
(ஓய்வு பெற்ற அதிபர்)
நாரந்தனை

உ
சக்தி துணை

# காயமே கோயிலாகும்

சனாதன தர்மத்தின் ஒரு கிளையாகிய இந்து சமயத்தின் வழிபாட்டு இயலிலே இறைவனை உருவிலே கண்டு ஆலயத்தில் வைத்து வழிபாடு செய்வது பழமையான பண்பாட்டின் விழுமியமாகும்.

"உள்ளம் பெருங்கோயில்" என்றும் "காயமே கோயிலாக" என்றும் நினைப்பவர் மனமே கோயிலாக கொண்டவன்" என்றும் கூறிய திருமுறைகளில் பெருமொழிகள் நம் இதயத்தால் சிந்திக்கத்தக்கவை.

ஆலயம் என்பது ஆத்மா லயப்படும் இடம். அமைதி இழந்த ஆத்மா சாந்தியடையும் தனியிடமே சன்னிதானம். முதற்கண் ஆலய அமைப்பைக் காண்போம்.

காயமே கோயில் ஒரு மனிதனின் உடல் அமைப்பே ஆலயமாகும்.

| | |
|---|---|
| தலை | மூலஸ்தானம் |
| கழுத்து | அர்த்த மண்டபம் |
| மார்பு | மகா மண்டபம் |
| வயிறு | நிருத்த மண்டபம் |
| ஆண்கோசன் | நந்தி முதலான வாகனங்கள் |
| பெண்குறி | பலிபீடம் |
| முதுகுதண்டுவடம் | கொடித்தம்பம் |
| மூலம் (மூலாதாரம்) | தம்பவிநாயகன் |
| தொடைப்பகுதி | தரிசன மண்டபம் |
| கணுக்கால் | கோபுர மண்டபம் |
| பாதம் | கோபுரம் |
| பாதவிரல்கள் | கோபுர கலசங்கள் |

இதில் நெற்றிச்சுழி (பொட்டு வைக்குமிடம்) பிரமஸ்தானம். அதிலே மூலவிக்கிரகத்தை யந்திரங்களின் மேல் நிறுவுவார்கள்.

இரண்டு கண்கள் இரண்டு சரவிளக்கு

சகரஸ்திரம் (மூளை) முகிலம் - கமலவிளக்கு

மகா மண்டபத்தில் அமைந்த சபை எனப்படும் மண்டபம் கிருகஸ்தானம் எனப்படும். அது ஒரு மனிதன் நீட்டி நிமிர்ந்து (சவாகனம்) உறங்கும் போது உதாரணமாக மேற்கே தலை வைத்து கிழக்கே கால் இருந்தால் இருதயம் இடப்பக்கமாக அமைந்தால் அவ்விடம் வடபால் சார்ந்த இருதய ஸ்தானமாகும். இம்மண்டபத்திலே சிவன் ஆலயங்களில் அம்பாளின் உற்சவமூர்த்தம் (எழுந்தருளி மூர்த்தம்) இருக்கும். அம்பாள் ஆலயத்தில் அம்மண்டபத்தில் சிவன் இருப்பார். இந்நிலை கணவனின் இருதயத்தில் மனைவியும், மனைவியின் இருதயத்தில் கணவனும் உயர்நிலைத் தத்துவம் நிருத்த மண்டபம் கிரிகைகள் செய்யுமிடம். மனிதனின் வயிறும் ஜீரணமான கிரியைகள் செய்யுமிடம். அம்மண்டபத்தில் சிறிய யாகுண்டம் இருக்கும். அதுபோல் மனிதனின் வயிறு உக்ராக்கினி

ஆண்கோசம் - நந்தி முதலான இறைவனின் வாகனங்கள். இவை பசு எனப்படும். உயிர் என்றும் அழைப்பர்.

பெண் யோனி - பலிபீடமாகும். இதனை குடும்ப வாழ்வில் மாயைக்குள் மனிதமனம்

பலியாக்கப்படுகின்றது. பலிபீட பூஜையில் நெய்வேத்தியம் வைத்தபின் அப்பலிக்கல்லைக் கழுவி நேரே இறைவனை நோக்கிக் கற்பூர தீபம் காட்டப்படும்.

மாயையில் இருந்து மாய்ந்த ஆத்மா அருட்புனலில் தோய்ந்தபின் உயிர் பதியை நோக்குகின்றது. இதுவே நந்தி முதல் பலிபீடம் வரையிலான தத்துவம்.

கொடிக்கம்பம் - மனிதனின் முள்ளந்தண்டு வடத்தைக் குறிக்கும். கொடித்தம்பத்தில் உள்ள 32 வளையங்கள் முள்ளந்தண்டில் உள்ள 32 இழையங்களே. அம்முள்ளந்தண்டில் உள்ள மேற்பகுதி தலையில் உள்ள நரம்பு முடிச்சோடு தொடர்பு பெற்று மூளை முகிலத்தில் இணைந்து இருக்கும் முள்ளந்தண்டில் உள்ள மூன்று அமிர்த நாடிகள் மேல் நோக்கிச் செல்லும். அவ்வேளை மூளை முகிலம் விழிப்படைய சடைமுளையம் தொழிற்படும். இதுவே கொடித்தம்பத்தில் சுற்றப்படும் கொடிச்சிலை தர்ப்பை, கயிறு, பூச்சரம் ஆகியன. கொடியேற்றிய பின் இறைவன் வெளிஉலா வருவார்.

திருக்கோவில் ஐந்து பிரகாரங்களுடன் அமைந்து விளங்குகின்றது. உடம்பில் அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என்று ஐந்து கோசங்கள் உள்ளன. கோசம் என்றால் சட்டை என்று பொருள். ஐந்து கோசங்களும் உடம்பாலயத்தில் ஐந்து பிரகாரங்களாகவுள்ளன.

திருக்கோவிலில் துவாரபாலகர் காவல் புரிந்து நிற்றல் போன்று இருதோள்களும் துவாரபாலகர்களாகவுள்ளன.

திருக்கோயிலின் முன்கோபுரம் உயர்ந்து நிற்றல் போன்று, பாதங்கள் உயர்ந்து உள்ளன. என்றெல்லாம் ஆகமங்களில் உணர்த்தப் பெறுகின்றன.

இவ்வுண்மைகள் காரணமாகவே பண்டைஞானிகள் உடம்பையும், உயிரையும் ஓம்பவேண்டிய அவசியத்தையும், உபாயத்தையும் உரைத்துச் சென்றுள்ளார்கள். உடம்பை இறைவனின் உறைவிடமாக கண்டார்கள். ஞானிகள். அப்பெரியவர்களுள் திருமந்திரம் தந்த திருமூலர் குறிப்பிடத்தக்க பெரியார் ஆவார். இவர் மனித உடம்பை பேண வேண்டிய அவசியத்தையும் வலியுறுத்தினார்.

மனித உடம்பு மகாதேவனின் ஆலயமாகத் திகழும் வகையினையும் நாம் உடம்பை வளர்த்து அவ்வுடம்பாலயத்தில் உத்தமனைக் கண்டு மகிழ்ந்ததினையும் தெளிவாக மொழிந்துள்ளார்.

முறை தெரிந்து வழுவாது பேணுதல் வேண்டும். இந்த உடம்பு நெடுநாள் இருத்தல் வேண்டும். உடம்பு இருந்தால் தான் உயிர் அவ்வுடம்பில் நிலவ இயலும். உடம்பு அழிந்தால் உயிர் அகலும் உயிர் அகன்றால் ஞானமுறுவது எவ்வாறு? தலைவனைக் கண்டு அருள் பெறவில்லையெனில் பிறவித்துயர் போக்குவது எவ்வாறு? எனவே இவ்வுடம்பை நெடுநாள் பேணி அதனுள் உயிரை உலவச் செய்து ஞானத்தை எய்தல் வேண்டும் என்பதனை "சுவரை வைத்துதான் சித்திரம் வரைய வேண்டும்" என்னும் முதுமொழியும் வலியுறுத்துகின்றது.

இக்காரணத்தை உணர்ந்து திருமூலர் தமது உடம்பை வளர்த்தார் என்றும் உடம்பை வளர்த்ததின் காரணமாக உயிரையும் பேணினார் என்பதினையும் அறிகின்றோம்.

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே".

என்ற திருமந்திரப் பாடல் இதனை உணர்த்துகின்றது.

உடம்பை வளர்த்ததன் வாயிலாக உயிர் வளர்த்த திருமூலர் இறைவனைத் தியானித்து துதித்ததால். அவ்வாறு தியானிப்போர் அப்பெருமானின் அடியவராவர். "அவ்வடியாரின் உடம்பு இறைவன் வெளிப்பட்டுத் தோன்றி விளங்கும் ஆலயமாகும்". என்ற உண்மையை உள்வைத்து

நடமாடும் கோயில் நம்பர்க்கு ஈயின்
படமாடும் கோயில் பகவற்க தாமே"

*எனக் கூறியுள்ளார். நடமாடும் கோவில் என்பது அடியாரைக் குறிக்கும். இந்த உடம்பு மகாதேவன் குடிகொள்ளும் கோவிலாக விளங்குவதால் உள்ளப்பூசை செய்தல் வேண்டும் என்பதினை தெளிவுபடுத்தியுள்ளார். உள்ளப்பூசை செய்ய வேண்டிய நிலைபற்றிக் கூறும் போது உடம்பாலயத்தைப் பற்றி தெளிவாக கூறியுள்ளார்.*

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானுக்கு வாய் கோபுரவாசல்
தெள்ளந் தெளிந்தாற்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே"

*இப்பாடலில் ஆருயிரின் உள்ளமாகிய நெஞ்சமே திருக்கோவிலின் கண் காணப்படும் பெருமை மிக்க கருவறையினை ஒக்கும்.*

*இக்கருவறையின் கண் வீற்றிருப்பது சிவக்கொழுந்து. ஊனாகிய உடம்பு முற்றும் திருக்கோயிலாகும். பேரருள் புரியும் சிவபெருமானாகிய பெருவள்ளலிற்கு வாய்மை ஐந்தெழுத்து உறுத்துவதாகிய வாய் கோபுர வாயிலாகும். திருவருளால் மெய்ப் பொருளாண்மையை செவ்வையாக தெரிந்தோர்க்கு அவ்வுயிரே சிவக்கொழுந்து ஆகும்.*

*கள்ள வழி இழுக்கும் மெய் வாய் முதலிய ஐம்புலன்களும் அழகுமிக்க மணிவிளக்கு ஆகும் எனத் திருமூலர் கூறியுள்ளார். இவ்வாறெல்லாம் உடம்பாலயத்தை விரிந்துரைத்த திருமூலர், உடம்பை இறைவர் கோயிலாக கொண்டு எழுந்தருளியுள்ளார். அவ்வாறு எழுந்தருளியுள்ள பரம்பொருளை நான் உடம்பினுள் கண்டேன் அதனால் யான் இவ்வுடம்பினை ஓம்புகின்றேன் என்பதனையும்*

உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமர் கோயில் கொண்டா ரென்று
உடம்பினை யான் இருந்து ஓம்புகின்றேன்"

*என்று தெளிவுபடுத்தியுள்ளார். "கற்றதனாலாய பயன் கடவுளின் திருவடி தொழுதல் உடம்பை பெற்றதனாலான பயன் உடம்பினுள் உத்தமனைக் காணுதல்" என்பது என ஔவைப்பாட்டியும் இவ்வாறு கூறுகின்றார்.*

உடம்பினாலாய பயனாவ தெல்லாம்
உடம்பினுள் உத்தமனைக் காண்"

*சைவநாற்பாதங்கள் நான்கு ஆகும். இவை சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்படும். ஆலயத் திருத்தொண்டுகள் செய்து வழிபாடு செய்து வழிபடுதல் சரியை வழிபாடு ஆகும். யாகங்கள், உற்சவங்கள் செய்து வழிபடுதல் கிரியை வழிபாடு ஆகும். நீக்கமற எங்கும் நிறைந்திருக்கும் இறைவனை உடம்பிலே கண்டு வழிபடும் நிலை யோகஞான வழிபாடுகள் ஆகும்.*

காயமே கோயிலாக கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி லிங்கம் ஆக
நேயமும் நெய்யும் பாலாய் நிறைய நீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்கு பொற்றவிக் காட்டி னோமே"

*என்று திருநாவுக்கரசர் சுவாமிகளின் தேவாரத்திலும் உடம்பினை கோவிலாக வெளிப்படுத்தியுள்ளதனை காணக்கூடியதாகவுள்ளது.*

**கோபாலபிள்ளை நாகேஸ்வரன்**
நாரந்தனை தெற்கு
ஊர்காவற்றுறை

உ

சக்தி துணை

# மனோன்மணியாய் மிளிரும் அன்னை

தாய்மையை ஆத்மார்த்தமாக வழிபட ஏற்பட்ட மார்க்கமே சாக்தம். தாயையும் தாய்மைக் குணங்களையும் சுற்றிச் சுழலும் சக்தியை, இதய சுத்தியுடன் பூஜிப்போர்தயவு. தாக்ஷிண்யம், கருணை முதலிய குணசீலங்களில் மேலோங்கியிருப்பதைக் காணுகின்றோம். உயிர் இயக்கத்துக்கு இன்றியமையாது விளங்கும் சக்தியை "எனர்ஜி" (Energy) என்கிறது விஞ்ஞானம். சக்தி இல்லையேல் ஒன்றுமே இயங்காது இதனை யாம் அனைவரும் நன்கறிவோம். இச்சக்திதான் பரம்பொருள். அஃதே என்றும் நின்று நிலவும் பரப்பிரமம். அஃதே ஆன்ம ஞானமுமாம்.

இதனை "இச்சா மாத்ரம் ப்ரபோ சீகுஉஷ்டி" என்று எமது ஆன்றோர் பட்டறிந்து உணர்ந்தனர். அதாவது பரப்பிரமம் ஆகிய அன்னையின் இச்சையாலேயே இப்பிரபஞ்சம் தோன்றலாயிற்று. அவள் இச்சையாலேயே அஃது இயங்கி வருகிறது. அவள் இச்சையிலேயே பிரளய காலத்தில் மாயை பிரபஞ்சமாக மாறி, அவளோடு இண்டறக் கலந்து விடுகிறது. இஃதே எமது வேதம் கூறும் ஆத்ம தத்துவமாகும். இதனை ஆதிசங்கரர் "அத்வைத சித்தாந்தம்" எனத்தாபன முறையில் தாபித்துள்ளார்.

சாக்த வழிபாடு இரு வழிகளில் பகுக்கப் பெறும். அந்தர்முக வழிபாட்டு (அகவழிபாடு) முறையே முதலாவது முறையாகும். பகிர்முக வழிபாட்டு (புறவழிபாடு) முறையினையே இரண்டாவது முறை என்போம். இவற்றுள் அந்தர் முக வழிபாடே ஆத்மாவுடன் இணைந்து நிற்கும். அது மனதை ஒருமைப்படுத்த உதவும் சாதனமாகும்.

பூர்வ புண்ணிய வசத்தால் கிடைக்கப் பெறும் நற்குருவின் துணையுடன் அன்னையின் அருளை நாடும் மெய்யடியார் அந்தர்முக வழிபாட்டால் ஆன்ம ஞானம் பெறுவர். இவ்வரும் ஞானம் தீவிர யோகத்தால் ஆணவம் அடங்கி பரப்பிரம்மமான சக்தியோடு இரண்டறக் கலக்க ஏதுவாகிறது.

சாதகன் ஸ்ரீசக்கரமேரு யந்திரத்தை தன்னுள் உருவகப்படுத்திக் காணும் ஞானியாகின்றான். தன்னுடலில் சக்தியின் அம்சத்தைக் கண்டு, பரம்பொருளான அன்னை சக்தியை ஆவாகனஞ் செய்து ஆத்மார்த்தமாகப் பூசை செய்கிறான். ஈற்றில் சக்தியுடன் இரண்டறக் கலக்க அவன் காண்பன யாவும் "ப்ரதட்சம்" என்று அஞ்ஞானம் அகல மாயப்பிரபஞ்சத்தின் தன்மையை உணர்கிறான்.

அந்தர்முக வழிபாடு பலனை எதிர்பார்த்துச் செய்யும் வழிபாடு அல்ல. அது நிஷ்காமிய வழிபாடு எனப்படும். அந்தர்முக வழிபாடு ப்ரணயாம முறைகளின் மூலம் அதாவது இடா பிங்களா நாடிகளுக்கு நடுவில் உள்ள "ஸுஷும்னா" வழியாக பிராண வாயுவை மூலாதாரத்திற் செலுத்தி அங்கு அமைதியான யோக நித்திரையில் இருக்கும் "குண்டலினி" சக்தியை விழிப்பூட்டி, மேலெழுப்பி யோக முறையில் ஆறு தானங்களையும் மூன்று சிருந்தி முடிச்சுகளையும் கடந்து ஸ்கஸ்ர பத்மத்தில் நிஷ்டையில் இருக்கும் சதாசிவத்துடன் சேருகின்றான். சாதகன் அதன் இணைப்பால் சிவம் மறைய சக்தியில் பிரகாசிக்கப் பெறுகிறான். இத்தத்துவத் தளத்திலேயே அன்னை பராசக்தி மனோன்மணியாக உருவகிக்கப் பெறுகிறாள்.

மனோன்மணி என்பது அம்பிகையின் ஆயிரம் திருநாமங்களில் ஒன்றாகும். அதாவது மனதினை மேன்நிலையில் வைத்து எழுப்புபவள், உயர்த்துபவள் என்பது பொருளாம். எமது உடலின் நெற்றிப் புருவமையம் ஓர் உன்னத இடமாகும். இம்மையமே மனோன்மணி சக்தியின் தானமாகும்.

இதனை உளங் கொண்டே இறைவனைத் துதிக்கும் போது "வாமதெவாயநம" "மனோன்மனாயநம" எனத் தோத்திரங்கள் குறிப்பிடுகின்றன. மனோன்மணியாக, மனத்துள் மனமாக, மனத்துக்கு உகந்தவனாக, உயர்ந்தவனாக இருப்பவன் இறைவன்.

அவனுடைய சக்தியாக அம்பிகையும் விளங்குவதால் அவன் மனோன்மணி ஆகிறாள். மனதின் சலனமற்ற, அசைவற்ற, நிலையே மனோன்மணியாம், நிர்மலமான மன அமைதியை அளிப்பவள் அவள். ஆதலால் அவள் மனோன்மணி எனப் பெயர் பெறுகிறாள்.

தெளிந்த, தூயமன விழுமியமே இறையுறையும் இடமாதலால் மாநுட வாழ்வு நெறி அதனை நோக்கி மையப்படுதல் வேண்டும். இதற்கு அம்பிகை கடாட்சம் அருளப் பெற வெண்டும். மனம், வாக்கு, காயத்தால் அன்னை மனோன்மணியை அந்தர்முக வழிபாட்டால் இறைஞ்ச, வேண்டும் பேறு அருளப் பெறும்.

இலக்கிய வித்தகர், சைவப்புலவர்
அநு.வை.நாகராசன

இல 443, காலி வீதி,
கொழும்பு 04

# யாக வழிபாடு

*ஆலயங்களில் நடைபெறும் அனைத்துக் கிரியைகளிலும் யாகவழிபாடு பிரதான இடத்தைப் பெறுகிறது. குறிப்பாக கும்பாபிஷேக காலத்தில் யாகமே முதன்மை வாய்ந்ததாகச் சிறப்புப் பெறுகிறது. பல்வேறு விதமான அலங்காரங்களுடனும் நான்கு திசைகளிலும் 4 வாசல்களுடனும் நடுவில் ஒரு பெரிய புனித மேடையும் (வேதிகை) அமைந்ததாக உயர்ந்த சதுரமான நில மேடையில் யாகம் அமைக்கப்படுகிறது.*

*யாகம் என்பது யக்ஞம், வேள்வி எனவும் கூறப்படும். இறைவனைத் திருப்திப்படுத்தி ஆன்மாக்களைப் பக்குவப்படுத்துவதே யாகத்தின் பிரதான குறிக்கோள். இறைவனுக்குப் பல பொருட்களை அக்னி மூலம் அர்ப்பணித்து மக்களுக்குரிய பல பலன்களைப் பெற்றுத் தருவதும் யாக வழிபாட்டின் இன்னுமொரு நோக்கமாகும். வேத காலங்களில் பெரு வேள்விகள் நடந்துள்ளன. "ராஜசூயம்", வாஜபேயம், "அஸ்வமேதம்" போன்ற யாகங்கள் குறிப்பிடத்தக்கன. இராமாயணத்திலும் யாகத்திற்கு வரும் இடையூறுகளை நீக்குவதற்காக விஸ்வாமித்திரர் இராமலஷ்சுமணரை அழைத்துச் சென்ற வரலாறு காணப்படுகிறது. அத்துடன் புத்திரகாமேஷ்டி என்ற யாக வழிபாடும் இடம் பெற்றுள்ளது.*

*மகாபாரத்தின் நடுநாயகமாக விளங்கும் பகவத்கீதையில் கிருஷ்ண பரமாத்மா அருச்சுனனுக்கு யாகத்தின் மகிமையையும் அது செய்யப்பட வேண்டிய அவசியத்தையும் எடுத்து உரைக்கிறார்.*

*"அன்னாத் பவந்தி பூதானி ப்ரஜ்ஜன்யாத் அன்ன சம்பவக யக்ஞாத் பவதி பர்ஜன்யோ யக்ஞக கர்ம சமுத்பவம்......."*

*(கர்மயோகம்)*

*அதாவது உயிர்கள் யாவும், உணவை நம்பியுள்ளன. உணவுப் பயிர்கள் மழையை நம்பியுள்ளன. மழையோ யாகத்தை நம்பி இருக்கிறது. யாகம் அங்கு நடாத்தப்படும் கிரியைகளையும் அக்னியில் இடப்படும் திரவியங்களையும் நம்பியுள்ளது. இவ்வாறு ஒன்றுக்கொன்று தொடர்புடைய வாழ்க்கைச் சக்கரத்தின் பிரதான அம்சமாக யாகம் விளங்குகிறது. யாகக் கிரியை பற்றி பிராமணங்கள் சிறப்பாக எடுத்துக் கூறுகின்றன. ஒவ்வொரு ஜீவராசியினதும் நன்மைக்காகவே யாக வழிபாடு அவசியமானது.*

*புராணங்களும் யாக மகிமையை பல இடங்களில் எடுத்துக் கூறுகின்றன. மார்க்கண்டேய புராணத்தில் சண்டீஹோமம் என்ற பெருவேள்வி பற்றிக் கூறப்படுகின்றது.*

*தமிழ் இலக்கியங்களில் புறநானூறு, திருமுருகாற்றுப்படை, பரிபாடல், சிலப்பதிகாரம் போன்ற பல நூல்களில் யாக வழிபாட்டின் மேன்மை உணர்த்தப்பட்டுள்ளன.*

*"நன்பல கேள்வி முற்றிய வேள்வி" எனப் புறநானூற்றிலும் ஒன்றுபுரி கொள்கை இரு பிறப்பாளர் முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி ஐம்பெரு வேள்வியும் .........." என சிலப்பதிகாரமும் செப்புகிறது. இவ்வாறு காலங்காலமாக இடைவிடாது யாக வாழ்க்கையோடு நமது முன்னோர்கள் ஈடுபட்டு இறைவனுக்கு நன்றியைச் செய்யும் அதே வேளை உலகத்திற்கும் நன்மை செய்தார்கள். முன்னைய காலங்களில் அரசர்கள் பல வேள்விகளைச் செய்தனர். பாண்டிய மன்னன் ஒருவன் பல யாகங்கள் செய்த காரணத்தினால் "பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி" என்ற சிறப்புப் பட்டத்தை பெற்றான்.*

*"வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு" என மணிவாசகர் வேள்விப் பெருமையை எடுத்து உரைக்கிறார்.*

....... புத்தியினான் மறைவழியே புற்பரப்பி
நெய் சமிதை கையிற் கொண்டு
வெந்தழலின் வேட்டுலகின் மிக அளிப்போன்
சேரும் மிழலையாமே'

என சம்பந்தர் யாகஉபகரணங்களையும் வழிபாட்டையும் எடுத்துக் கூறுகிறார். யாகத்திற்கு சமித்து நெய் என்பனவும் தர்ப்பையும் முதன்மையான இடத்தைப் பெறுகிறது.

ஆகமங்களின் கும்பாபிஷேகச் செலவை பதினொரு பங்காகப் பிரித்து மூன்று பங்கை யாகத்திற்கு ஒதுக்க வேண்டும் என கூறப்பட்டுள்ளது. ஏனைய செலவுகளுக்கு ஒதுக்கப்படும் பங்கினைவிட யாகத்திற்கே பெரும்பங்கு ஒதுக்கப்படுவதற்குக் காரணம் யாகமே உயிரோட்டமான திருவருளை தருகிறது என்பதாகும். யாக அமைப்பு அங்கு ஆகுதி செய்யப்படும் திரவியங்கள் என்பன பெரும் செலவில் செய்யப்பட வேண்டியதாகும்.

வேள்விகள் ஐம்பெரு வேள்விகளாகக் கூறப்படுகின்றன. அவை யாவன. பிரம்மயக்ஞம், தேவயக்ஞம், மானுசயக்ஞம், பிதிர்யக்ஞம், பூத யக்ஞம் என்பனவையாகும்.

பிரம்மயக்ஞம் என்பதில் வேதாத்யாயனம், திருமுறை பாராயணம் என்பன அடங்கும்.

தேவ யக்ஞம் என்பது எந்த இறைவனுக்கு கும்பாபிஷேகம் நடைபெறுகின்றதோ அந்த இறைவனை குறித்துச் செய்யும் வேள்வியாகும். மானுசயக்ஞம் என்பது இறைவனுக்குப் படைக்கப்படும் பிரசாதங்களை அனைவருக்கும் பகிர்ந்து அளிப்பதுடன் அன்னதானம் செய்தல் என்பவற்றில் அடங்கும்.

பித்ரு யக்ஞம் என்பது கும்பாபிஷேக ஆரம்பத்தில் பித்ருகளுக்கு தர்ப்பணம் செய்வதன் மூலம் நிறைவேற்றப்படுகிறது.

பூதயக்ஞம் என்பது யாக பூஜை முடிவில் இடம்பெறும் அந்தர்பலி, பகிர்பலி போன்ற பலிதானங்களால் பூர்த்தி ஆக்கப்படுகிறது. இவ்வாறு கூறப்படும் ஐந்து வேள்விகளையும் உள்ளடக்கியே கும்பாபிஷேக யாகவழிபாடு நடாத்தப்படுகிறது. கும்பாபிஷேக காலங்களில் நடைபெறும் யாகபூஜையை மக்கள் தரிசிப்பதால் பேரருள் பெறுகின்றனர்.

யாகசாலையில் நான்கு வாசல்களும் நான்கு வேதங்களால் துதிக்கப்படுகிறது. கிழக்கு வாசல் அமைதியை தரும் சாந்தி தோரணமாகவும், தெற்கு வாசல் செல்வத்தைத் தரும் பூசி தோரணமாகவும், மேற்கு வாசல் பலத்தை தரும் பல தோரணமாகவும் வடக்கு வாசல் ஆரோக்யம் தரும் ஆரோக்கிய தோரணமாகவும் கூறப்படுகிறது. அத்துடன் யாகத்தின் மண்டபத்தில் சுற்றவரக் கட்டப்பட்டிருக்கும் பன்னிரண்டு தடிகளும் பன்னிரண்டு மாத சூரியர்களின் பெயர்களாலும் வேதிகையில் கட்டப்பட்டிருக்கும் நான்கு கம்பங்களும் தர்மம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வர்யம் என்ற பெயர்களாலும் போற்றப்படுகின்றது. யாகத்தின் மேல் கட்டப்பட்டு இருக்கும் வெள்ளை சந்திரனாக பூசை செய்யப்படுகிறது. இவ்வாறு சூரிய, சந்திர பிரகாசத்துடன் யாகம் விளங்குகின்றது.

யாகத்தில் வளர்க்கப்படும் அக்னி மக்களின் தூதுவனாக விளங்குகின்றது.

"அக்னிம் தூதம் விருணீமஹே" என வேதம் அக்னியை அழைக்கிறது. அக்னி தான் அனைத்தையும் முன்னின்று செய்யும் பெருமையுடையது என்ற வகையில் "அக்னி மீளே புரோகஹீம்" எனவும் வேதம் அக்னியைப் புகழுகிறது. அக்னியானது தான் தூய்மையானது மாத்திரமன்றி தன்னை சார்ந்தவர்களையும் தூய்மையாக்குகிறது.

கும்பாபிஷேக யாகசாலையில் ஒரு குண்டம், ஐந்து குண்டம், ஒன்பது குண்டம், பதினேழு, இருபத்தைந்து, முப்பத்தி மூன்று குண்டங்கள் என யாக அக்னிகள் வளர்க்கப்படுகின்றன. இவற்றில் பெரும்பான்மை இடத்தை பெற்றிருப்பது ஒன்பது குண்டங்கள் அமைக்கப்பட்டு செய்யப்படும் யாக வழிபாடாகும். நவகுண்ட வழிபாடு பற்றி திருமூலர் திருமந்திரத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

"நவகுண்டமானவை நானுரை செய்யின்
நவகுண்டத்துள்ளெழு நற்றீபத் தானும்
நவ குண்டத் துள்ளெழு நன்மைகளெல்லாம்
நவகுண்டமானவை நானுரைப்பேனே"

*நிலம், நீர் முதலிய பஞ்சபூதங்களும் யாகத்தின் வடிவமாகவும் கூறப்படுகின்றது. இப்பஞ்ச பூதங்களுடன் சூரியன், சந்திரன், எஜமானன் (ஆன்மா) ஆகிய எட்டு மூர்த்தங்களும் கிழக்கு முதலாகிய எட்டுக் குண்டங்களில் பூசை செய்யப்பட்டு ஆகுதிகள் வழங்கப்படுகின்றன. பிரதான குண்டத்தில் பிரதான மூர்த்தி ஆவாகனம் செய்யப்பட்டு ஆகுதிகள் வழங்கப்படுகின்றன.*

*இவ்வாறான ஆகுதிகளால் உலகில் உள்ள அனைத்து உயிர்களும் தேவர்களும் ஆனந்தம் பெற்று விளங்குவார்கள். இதனை திருமூலர் பின்வருமாறு கூறுகிறார்.*

"வசையில் விழுப்பொருள் வானும் நிலனும்
திசையும் திசைபெறு தேவர் குழாமும்
விசையம் பெருகிய வேத முதலாம்
அசைவிலா அந்தணர் ஆகுதி வேட்கிலே"

எனவே வேதநெறி தழைத்தோங்கவும் மிகுசைவத்துறை விளங்கவும் யாகவழிபாடு அவசியம் ஆகும். யாக வழிபாட்டின் நிறைவான ஆகுதியாகிய பூர்ணாகுதி வழங்கிய பின் அக்கினியில் *உள்ள இறைவனை கும்பத்தில் சாந்நித்தியப்படுத்தி பின்பு குறிக்கப்பட்ட மங்கள நேரத்தில் மூல மூர்த்திக்கு கும்பாபிஷேகம் செய்வதன் மூலம் இறை அருள் அங்கு சேமிக்கப்படுகிறது. அக்னி வழிபாடாற்றிய பின் யாக வழிபாடாற்றிய தன் சின்னமாகவும், எமது கன்ம வினைகள் எரிக்கப்பட்டு புது அருள் பெற்றுள்ளோம் என்பதற்காகவும் "ரக்ஷை" எனப்படும் கறுப்புப் பொட்டு ஆன்ம பாதுகாப்பிற்காக நெற்றியில் அணியப்பட வேண்டும். இது எமக்கு இருக்கும் இரு கண்களையும் விட மூன்றாவது கண்ணாகிய ஞானக்கண் திறப்பதற்கு வழிவகுக்கும். யாகபூசை மஹோற்சவ காலங்களில் பகலும் இரவும் நடைபெறுவதையும் நாம் காண்கிறோம். எங்கு யாக பூசை இடம் பெற்றாலும் அவ்அக்னி வழிபாட்டை நாம் கண்டு எம் பழவினைகளைப் போக்குவோமாக.*

*"நான் மறை அறங்களோங்குக! நற்றவம் வேள்விமல்க"*

## ஆலயம்

ஆலயம் என்பதன் பொருள் எல்லாம் ஒடுங்கும்
இடம் என்பதைக் குறிக்கும். "ஆ" என்பது பசுவையும்
"லயம்" என்பது நடுக்கத்தையும் குறிக்கும்
பசு என்பது ஆன்மா. ஆன்மா தன் மும்மலங்களையும் நீக்கி
இறைவனிடம் ஒடுங்குவதற்குரிய இடமாக அமைவது ஆலயம்.
உடம்பினை இருப்பிடமாகக் கொண்டு உயிர் விளங்குவது போன்று,
ஆலயத்தை இருப்பிடமாக வைத்து ஆண்டவன் விளங்குகின்றார்.

## பராசக்தியின் வடிவமும் மனோன்மணி அம்மை மகிமையும்

*உயிர்களின் நிலைக்களனாக அமைவது பஞ்சபூதங்கள் உயிர்கள் தோன்றவும், நிலைக்கவும், வாழவும், மறையவும் பஞ்சபூதங்களே காரணமாக அமைகின்றன. எனவே தான் பஞ்சபூதங்களை இறைவடிவாகவும் அவற்றினை இயக்கு மாற்றலைச் சக்தி வடிவாகவும் கண்டனர் ஆன்றோர், ஞானிகளும், யோகிகளும், சித்தர்களும் தமது திட்பமான ஆன்மீக நோக்கினாலும் அனுபவத்தினாலும் இவ்வுண்மையினை உறுதிப்படுத்தி உள்ளனர்.*

போற்றி இப்புவனம், நீர் தீக்காலொடு வானமானாய் என்றும்
வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி.....

*நின்றாயை என் சொல்லி வாழ்த்துவனே" என்றும் மணிவாசகப் பெருமான் ஐம்பூதங்களைச் சிவ வடிவமாகக் காண்கின்றார். வணங்குகின்றார். வாழ்த்துகின்றார்.*

*அப்பரோ,*

"இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமானனாய் எரியும் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி" *எனப் பஞ்சபூதங்களைச் சிவபரம் பொருளாகப் பார்க்கிறார்.*

*"இயற்கை என்றுனை உரைப்பர் - சிலர்*

*இணங்கும் ஐம்பூதங்கள் என்று இசைப்பர்" என்று பாரதியாரும் அவ்வுண்மை முடிவினுக்கு உரமூட்டி உணரவைக்கின்றார்.*

*பஞ்சபூதங்களின் வடிவமும், இயக்கமுமே சிவசக்தி என்பதனை நம்பழம் பெரும் சைவநெறி சிறப்பாகத் தெளிவுபடுத்திக் காட்டுகின்றது.*

*அப்பர், மணிவாசகர், பாரதியார் போன்றோர் பஞ்சபூதங்களை சிவபரம் பொருளாகவும், இறைவடிவாகவும் காண்கின்ற அதே நிலையில், அம்பிகையின் அருட்பார்வை பெற்ற அபிராமிப் பட்டரோ பஞ்சபூதங்களில் சக்தியின் வடிவினைக் காண்கின்றார். அக்காட்சியினை இப்பாடலில் நாம் காணலாம்.*

பாரும், புனலும், கனலும் வெங்
காலும், படர்விசும்பும்
ஊரும், முருகு, சுவை, ஒளி
ஊறு, ஒலி ஒன்றுபடச் சேருந்தலைவி சிவகாமசுந்தரி" *என்று கூறுகின்றார்.*

*அதாவது பூமியும், நீரும், நெருப்பும், வாயுவும், ஆகாயமும் ஆகிய ஐம்பூதங்களிலும் முறையே பரவி மணமும், சுவையும், ஒளியும், பரிசமும், சத்தமுமாகிய தன் மாத்திரைகள் இசையும்படி அவற்றிடத்தே ஊடுருவி நிற்கும் சிவகாமசுந்தரியெனச் சக்தியின் வியாபகத்தை அபிராமிப்பட்டர் தெளிவாக விளக்கியுள்ளார்.*

*மேலும் ஒருபடி மேலே சென்று*

ஒன்றாய் அரும்பி பலவாய் விரிந்து
இவ்வுலகமெல்லாம் நின்றாள்" *எனச் சக்தியின் தோற்றத்தினை, வியாபகத்தினை அழகாகவும், ஆழமாகவும் எடுத்துக் கூறியுள்ளார்.*

*பாரதியாரும் ஐம்பூதங்களிற் சக்தியின் வடிவினைக் கண்ணுறக் கண்டு களிப்புறுவதைக் காணலாம்.*

"பூதங்கள் ஐந்திலிருந்து எங்குங் கண்ணில்
புலப்படும் சக்தியைப் போற்றுகின்றோம்" *என்று சக்தியின் வெளிப்பாட்டினை இலகு தமிழில்*

தெளிவாக வெளிப்படுத்தியுள்ளார். சக்தி சிவபரம் பொருளோடு கலக்கும் நிலை, அத்துவிதமாகும். இது இரண்டறக் கலந்து நிற்கும் ஓர் நிலை. திருமூலர் இந்நிலையினை மணிக்கும் அதில் நின்று ஒளிரும் ஒளிக்கும் ஒப்பிடுகின்றார்.

மன்னும் சக்தி ஆதி மணி ஒளி மாசோ பை

அன்ன தோடு ஒப்பமிடல் ஒன்றாமாறு அது" என்று கூறுகின்றார்.

அஃதாவது சக்தியாகிய ஆற்றல் சிவபரம்பொருளோடு சேரும் போது மணி ஒளி போலத் தனக்கு நிகரற்ற பேரழகுடன் பொலியும். அதற்கு நிகராகும் பொருள் வேறொன்றில்லை. இங்கே மணியினைச் சிவனுக்கும், ஒளியினைச் சக்திக்கும் ஒப்பிட்டுக் கூறப்படுகின்றது. இதனைத் திருமூலர் பிறிதோரிடத்தில் "மாணிக்கத்துள்ளே மரகத சோதியாய்" இருப்பர் என்று அழகுறக் கூறி வைத்துள்ளார். மாணிக்கவாசகரும் "அம்மையே அப்பா ஒப்பிலாமணியே" என்று பாடி அருளியதும் அவ்வுண்மையினை உறுதிப்படுத்துவதாக உள்ளது.

அன்னை பராசக்தி பேராற்றல் உடையவள், உலக ஆக்கத்திற்கும், அழிவிற்கும் மூலகாரணமாக இருந்து வருபவள்.

"மூலப்பரம் பொருளின் நாட்டம் - இந்த

மூன்று புவியும் தன்னாட்டம்" என்று பாரதியார் சக்தியின் ஆற்றலை, வல்லமையினைச் சிறப்பாக எடுத்துக் கூறுகின்றார்.

இப்பேராற்றல் வாய்ந்த அன்னை பராசக்தியை திருமந்திரம் "திரிபுரை" என்று கூறுகின்றது. "ஒன்றாய் அரும்பி" என்று அபிராமிப்பட்டர் கூறுவதும், திரிபுரை என்னும் ஏகசக்தி வடிவினையே குறிப்பதாகும். "பலவாய் விரிந்து இவ்வுலகு எங்குமாய் நின்றாள்" என்பது, திரிபுரையானவள் பலகாரணப் பெயர்களைப் பெற்று அவ்வகையில் எல்லாம் அவள் விளங்குகின்றாள். இயங்குகின்றாள். என்பதாகும்.

இவ்வுண்மையினைத் திருமந்திரம் தெளிவாக எடுத்துக் கூறுவதைப் பார்க்கலாம்.

"திரிபுரை சுந்தரி அந்தரி சிந்தூரப்

பரிபுரை நாரணி அம்பலவன்னத்தி

இருள்புரை ஈசி மனோன்மணி என்ன

வருபலவாய் நிற்கும் மாமாது தானே" பாடலிலே குறிப்பிடப்பட்டுள்ள "மாமாது" ஆகிய சக்தி (திரிபுரை) பலகாரணப் பெயர்களை உடையவள். சுந்தரி, அந்தரி, பரிபுரை, நாரணி, அம்பலவன்னத்தி, இருள்புரை, ஈசிமனோன்மணி ஆகிய பல நாமங்களை உடையவளாக திகழ்கின்றாள். இந்நாமங்களுக்கு அமைவாகவே திருவருட் செயற்பாடுகளும் அமையும் என்பர் ஆன்றோர்.

இங்கு நம் ஆக்கத்திற்கு எடுத்துக் கொள்வது மனோன்மணியினைப் பற்றியதேயாகும்.

அன்னை மனோன்மணி நிலவண்ணத்தாள். அவளின் மறுபெயர் ஈஸ்வரியாகும். இதனைத் திருமந்திரம்" இருள்புரை ஈசிமனோன்மணி" என்கின்றது.

அம்மை மனோன்மணியினைப் பல்வேறு நிலைகளில் பாராட்டி பரவுகின்றார் திருமூலர். அவளின் மகிமைகளை, மகத்துவங்களை எடுத்துக் கூறுவதோடல்லாமல் நம் அகக் கண்முன்னே காட்சிக்கும் வைத்து விடுகின்றார்.

"மாசற்ற சோதி மனோன்மணி மங்கை" என்றும்

"ஆலிக்கும் கன்னி அரியை மனோன்மணி

பாலித்து உலகில் பரந்த பெண்ணாகும்" என்றும்

"வெல்ல வொண்ணாத விளைந்தனிநாயகி

மல்ல ஒண்ணாத மனோன்மணி தானே" என்றும்

"ஆகிய கோதண்டத்தாகும் மனோன்மணி

ஆகும் அவள் ஐங்கருமத்தாளே" என்றும்

வாயுவும், மனமும் கடந்த மனோன்மணி

தாயும், மகளும் தாரமும் தானே" என்றும் போற்றிப் புகழப்படுகின்றாள் அம்மை.

மனோன்மணி அம்மை தூய்மையான சோதி வடிவானவள். உலகினைக் காத்து நின்று பரிபாலிப்பவள். அவள் ஆற்றலுக்கு அளவே இல்லை. வெல்ல வொண்ணாத ஆற்றலும், சொல்ல வொண்ணாத பெருமையும் உடையவள். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களையும் புரிபவள். இதனை "மனோன்மணி ஐங்கருமத்தாளே" என்று குறிப்பிடுவதிலிருந்து அம்மையின் ஆற்றலின் மகிமையினைப் புரிந்து கொள்ளலாம். மனத்தாலும், வாக்காலும் அளந்து அறிய முடியாதவள் மனோன்மணி அம்மை. ஆனால் அவள் இல்லற வாழ்வில் நின்று இனிமை தந்து நல்லறம் காப்பவள்.

மனோசத்தியினாலோ, ஆன்மீக சக்தியினாலோ அளந்தறிய முடியாத இம்மகாசக்தி மூலப்பரம்பொருள் அன்னை பராசக்தியே, நாரந்தனை வடக்கு பண்டாரபுரத்தில் உருவடிவிற் தோன்றினாள். பொற்சிலையாக, அன்னையின் பொற் திருவுருவமாக கல்லிடைத் தோன்றினாள். அருங்காட்சி கொடுத்தாள்.

அம்மை அருட்தோற்றம் ஓர் அதிசயக் காட்சியாக அமைந்தது. உணர்ச்சியினையும், எழுச்சியினையும், ஆர்வத்தினையும் மக்களிடையே உண்டாக்கியது.

வரலாற்றுப் பின்னணியோடு இணைந்து பிணைந்த அம்மையின் அருள்தோற்றம், பண்டாரபுரத்திலிருந்து தமிழ் கூறும் நல்உலகுக்கெல்லாம் பரவத்தொடங்கியது.

சாதி, சமய வேறுபாடற்ற ஓர் தூய உணர்ச்சி பூர்வமான நிலையில் நின்று அனைவரும் ஒன்றிணைந்து அம்மைக்கு ஆகம விதிப்படி ஆலயம் அமைத்தனர். அதில் அம்மையை பிரதிஷ்டை செய்தனர்.

அம்மையும், ஆனந்த வடிவில், அருள் வடிவில் ஸ்ரீ தான்தோன்றி மனோன்மணி அம்மையாக ஆலயத்தில் வீற்றிருந்து அருள் பாலிக்கத் தொடங்கினாள்.

பொன்னுக்கேற்ற மணிபோல ஆலயத்துக்கேற்ற அந்தணராக சிவஸ்ரீ இராமநாதக்குருக்களும் பொறுப்பு ஏற்றுக் கொண்டார். வேதாகம முறைப்படி பூசைகளும், விழாக்களும் பக்தி பூர்வமாக நடைபெற்று வரலாயிற்று. அருள் ஒளி பெற்ற ஆலயமாக வளர்ச்சி பெற்று மலர்ச்சி உற்றது. மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் ஒருங்கே அமையப் பெற்ற ஆலயமாகியது.

அம்பாள் ஆலயம் தமக்குக் கிடைத்த அரும்பெரும் சொத்தாகவும், ஓர் வரப்பிரசாதமாகவும், ஆலயத்தினைச் சூழவுள்ள மக்கள் அனைவரும் கருதினர். அம்பிகையின் மீது உறுதியான நம்பிக்கையும், பற்றும், பக்தியும் உடையவர்களானார்கள். அம்பிகையின் அடியார்களாகி இறைபணியே தம்பணியாகக் கொண்ட பக்தர்கள் பலர் தோன்றலாயினர்.

மனோன்மணி அம்மையின் அருள் ஒளிவீச்சு, அங்கிங்கெனாதபடி எங்கும் பரந்து விரிந்தது. அனைவரையும் ஈர்த்து ஈர்த்து ஆட்கொண்டதெனலாம்.

பக்தர்களின் இடையறாத அரும்பெரும் முயற்சியால் மனோன்மணி அம்மைக்குச் சித்திரத்தேரும் அமைக்கப்பட்டது. மகோற்சவ விழாக்களும் சிறப்புற நடைபெற்று வரலாயின. அம்மையின் அருள்வேண்டிப் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் ஆலயத்திற்கு வரலாயினர். அவர்களின் விருப்பங்கள், வேண்டுதல்கள், நேர்த்திக்கடன்கள் அனைத்தும் அம்மையின் அருள்பார்வையால் நிறைவு பெற்றுவரலான. அம்மையின் சன்னிதியில் திரண்டு நிற்கும், அடியார்களின் உள்ளார்ந்த பக்தி நிலையே இதற்குச் சான்றாகும்.

மனோன்மணி அம்மையின் கடைக்கண் பார்வைபட்டால், அது:

"தனம் தரும் கல்வி தரும் ஒரு
நாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வவடிவும்
தரும் நெஞ்சில் வஞ்சமிலா
இனந்தரும் நல்லன வெல்லாம்
தரும் அன்பர் என்பவர்க்கே" என்ற அபிராமிப்பட்டரின் அருள்வாக்கு.

அம்மையின் அடியார்கள் வாழ்வில் பிரதிபலிக்கத் தொடங்கியது. அருளும், பொருளும், கல்வி ஞானமும் அவர்களின் வாழ்வில் அரும்பி மலரத் தொடங்கின. இவ்வுண்மையினை அடியார்கள் தம்வாழ்வில் உணர்ந்தனர். அறிந்தனர். தெளிந்தனர். இதன் விளைவு அம்மையின் மீது ஆராத அன்பும், குறையாத பக்தியும் உடையவர்களாக வாழ்ந்தனர். வாழ்ந்து வருகின்றனர்.

இன்று கஷ்டங்கள், துன்பங்கள் பிரச்சினைகள் தொடர்ந்து கொண்டிருந்தாலும், ஆலய வளர்ச்சிக்காக அடியவர்கள் காட்டும் ஆர்வம் அளப்பரியது.

தான் தோன்றி மனோன்மணி அம்மையின் ஆலய வரலாற்றில் அரை நூற்றாண்டு பூர்த்தயாகி உள்ளது. அது தொடர்பாக ஆலயத்தின் தோற்றம், எழுச்சி, வளர்ச்சி பற்றியும், அம்மையின் மகிமை அருள்பொலிவு, அனுக்கிரகங்கள் பற்றியும் உள்ளகப்படுத்தி வெளியிடப்பட்டுள்ள மலரினை வாழ்த்தி வணங்குவோம்.

அம்மை என்றும் எமக்கு நல்லனவெல்லாம் தந்து, நலம் பெற வைப்பாள் என நம்புவோம். ஏனெனில் அவள்.

"அஞ்சொல் மொழியாள், அருந்தவப் பெண்பிள்ளை
செஞ்சொல் மடமொழி, சீருடைச் சேயிழை
தஞ்ச மென்றெண்ணித் தன் சேவடி போற்றுவோர்க்கு
இன்சொல் அளிக்கும் இறைவி ஆகும்". எனவே மனோன்மணி அம்மையின் மகிமையினை, மகத்துவத்தினை உள்ளத்தில் வைத்து என்றும் உள்ளுவோம். அவளை உளமாரப் போற்றிப் புகழ்ந்து வழிபடுவோம். அவளிடம் பூரண சரணாகதி அடைவோம். துன்பங்களையும், துயரங்களையும் அவளிடம் முறையிடுவோம்.

அநீதிகள் அழிந்து நீதிகள் நிலைக்கட்டுமென்று வேண்டிக் கொள்வோம். உள்ளுணர்வுடன் துன்பக் கண்ணீரை அம்மைக்குக் காணிக்கை ஆக்குவோம். "அழுதால் உன்னைப் பெறலாமே" என்ற மணிவாசகரின் அருள்வாக்கினை உள்ளத்தில் இருத்துவோம்.

அவள் "தஞ்சமென்றெண்ணித் தன்னடி போற்றுவார்க்கு அஞ்சேல் என்று அருள்பாலிப்பாள்" எங்கள் மனோன்மணி அம்மை.

ஓம் சக்தி

**ச.மகாலிங்கம்**
ஆசிரியர்
நாரந்தனை

சக்தி சக்தி சக்தி என்று சொல்லு - கெட்ட
சஞ்சலங்கள் யாவினையும் சொல்லு
சக்தி சக்தி சக்தியென்று சொல்லு - அவள்
சந்நிதியிலே தொழுது நில்லு.

உ
சக்தி துணை

# காப்பதும் கடனன்றோ!

*கடல் அலை "ஓம் ஓம்" எனவே தம் ஒத*
*கரைவளர் செந்தாழை*
*மடல்நறு நாற்றம் மருங்கெலாம் கமழும்*
*மானத் திருவூராம்*
*வடக்குநா ரந்தனை இடமாக வாழ்வோர்*
*வல்வினை போக்கிடவே*
*தடவரை இமயத் திருந்திங்கு வந்த*
*தான்தோன்றி ஈஸ்வரியே!*

*எழிலுள ஊர்பல இருக்கவும் இப்பால்*
*எருக்கொடு திருக்கொன்றைப்*
*பொழிலணி நாரந் தனையிடங் கொண்ட*
*பூரணி சீர்பாதம்*
*வழிபடத் தந்த கருணையைப் போற்றி*
*வாழ்த்துதெம் வல்வினைநோய்*
*அழிவுற அருளீர் இறைவர்தம் ஆணை*
*அன்னை மனோன் மணியே!*

*நண்டு நற்கோலம் இடவுஞ்செவ் வலகு*
*நாரைகள் ஒரு காலில்*
*நின்று நிதமும் தவஞ்செயும் நெய்தல்*
*நிலஞ்சேர் இவ்வூரின்*
*மன்றினில் வெள்ளைக் கற்பா ரிடங்கொள்*
*மாசில்மனோன் மணியே!*
*என்றும் எங்கள் உயிர்க்குள் உயிராய்*
*இருந்தருள் புரிவாயே!*

*தெங்கொடு பனைகள் ஈஞ்சுமுட் காரை*
*செறிந்த தரையிடத்தே*
*சங்குவெண் இப்பி ஊரிமண் பாவிச்*
*சமன் செய்த எம்மூரில்*
*எங்களை ஆளும் கருணையினாலே*
*எழுந்தருள் செய்பவளே*
*மங்கள கௌரி மனதுறை ஐயை*
*மனோன்மணி அம்பாளே!*

*காரமிளகாய் புகையிலைச் செந்நெற்*
*கழனிகள் சூழக் கடல்*
*ஓரத் துயர்ந்த நாரந் தனையூர்*
*உய்யக் குடிவந்த*
*ஆரணப் பொருளே எமதுயிர் வாழ்வே*
*அம்மா எம்பிறப்பின்*
*காரண மாய காமி மனோன்மணீ*
*காப்பதும் கடனன்றோ!*

***-தில்லைச்சிவன***

குறிப்பு: இவ்விடய தானம் அம்பிகை தோன்றி மக்களுக்கு காட்சியளித்த 50வது வருட நிறைவையொட்டி வெளியிட இருந்த மலருக்கு எழுதப்பட்டது. (1951-2001)

நாரந்தனை பண்டாரபுலம் என்னும் திருப்பதியில் எழுந்தருளியுள்ள
தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்மன்

# திருப்பள்ளியெழுச்சி

01. அம்மா, அம்மா வென்றே நின்னடியார்
அழைத்துன் திருவாசல் அடைந்தார் கண்டாய்
இம்மா நிலத்தில் இயன்றபணி செய்திடுவோம்
இங்கெமக் குத்துணை நீயென்றே இரங்குகிறார்
எம்மா திரமும் ஏற்றும் எழிலரசி
எமைக் காக் கத்தானே தோன்றி வந்தாய்
கொம்மெனப் பொழுது புலர்ந்தது தாயே
கோமகளே பள்ளி நீ யெழுந்தரு ளாயே

02. இறைவியே யெம்முயிர்க் காதாரமான பொருளே
இங்கெம் துயர்தீரக் கடலோரம் வந்தவளே
குறையெது மில்லோம் குன்றனைய குணத்தாய்
குற்றம் பொறுத்தெம் குலமெலாம் வாழ்விப்பாய்
நிறைவான மனோன் மணியே மரகதமே
நிரந்தரம் நின்பணி செய்யவே யருள்வாய்
கறையான விருள்போ யொளிபர விற்றம்மா
கனகமே பள்ளிநீ யெழுந்தரு ளாயே

03. சிறகடித்துச் சேவல் கூவுவதுங் கேளாய்
சின்னக் குயில்கள் அழைப்பதும் கேளாய்
அறவாழி யந்தணர் ஆரணம் ஓதுகின்றார்
ஆளியினம் மலர்மிசை முரல்வதும் காணாய்
உறவான எம்தாயே தான்தோன்றி யம்மையே
உன்பாதத் தொளிகாண வுன்சந்நிதி வந்தோம்
பெறலரிய பெற்றியாய் யெம்மான்தன் பாகத்தாய்
பெருந்தேவி பள்ளிநீ யெழுந்தரு ளாயே.

04. செய்ய தாமரைத் தாள் கண்டு சேவிக்கச்
சேல்விழிக் கருணை கண்டு நாம் பரவிடவே
உய்யும் வழிகாட்டும் நின்நோக் கினை நாடியே
உன்னடியார் வந்தோம் காண் மனோன் மணியே
வெய்ய பவமினி மேவிடாம லம்மா நீ
வெவ்வினை தன்னை யழித்திட வேண்டியே
துய்ய நின்னெழிற் கோயில் வந்தோம்
தூயவளே பள்ளிநீ யெழுந்தரு ளாயே.

05. கல்லுடைத் தவேளை கற்பகமே நீ வந்தாய்
கரும்புருச் சிலையே யெம்கண் குளமாகி
அல்லும் பகலும் அனவரத முந்துதித்தோம்
அயராது உனக்கே ஆலயம் அமைத்தோம்
இல்லங்கள் தோறும் நீ யெழுந்தருளி யெம்மை
ஆட்கொண் டருளிய அற்புத மறிவோம்
மெல்லனச் செவ்வான மெழிற்கோலங் காட்டியதே
மெல்லியளே பள்ளிநீ யெழுந்தரு ளாயே.

06. நாரந்தனைப் பண்டார புலமதிற் தோன்றிய
நாயகியே நாரணியே யெம்மனோன்மணியே
நாரெடுத்து மலரெடுத்து நன்மாலை தொடுத்தோம்
நலமான பண்தொடுத்துப் பண்ணிசை பாடி வந்தோம்
ஆரெமக்கு ஆதாரம் இப்பாரினி லென்றே
அம்மா அலமந்துன் பாதமே நாடினோம்
ஊரார்க் குற்றதோர் துணையான மனோன்மணியே
உதயமே பள்ளிநீ யெழுந்தரு ளாயே.

07. செங்கதிர்க் கரங்கள் நீட்டிக் கதிரவன்
செக்கச் சிவந்ததோர் கோளமென வெழுந்தான்
கங்குலுங் கரைந்திடப் பனிமுத்தம் மறைந்தது
கருணையி னுருவேநின் கனிமுகங் காட்டெனவே
பொங்கிடும் அன்பால் அடியவரும் வந்தார்
பாலினுஞ் சொல்லினிய மனோன்மணித் தாயே
எங்குமாய் எதிலுமாய் நிறைந்த எழிலரசி
எம்முயிரே பள்ளிநீ யெழுந்தரு ளாயே

08. அலை வந்து கரைமோது மயலிலே அம்மா நீ
அற்புதமாய்த் தோன்றியே ஆதரித்துக் காத்தாய்
கலைமாதும் அலைமாதும் பரவிடும் தாயே
கற்பனைக் கெட்டாத கருணையி னுருவே
குறையாத செல்வமும் கோடாத வாழ்வும்
குற்றமிலா அடியவர்க் கருளும் கற்பகமே
விலையிலா மாணிக்கமே வேதத்தின் வித்தே
வித்தகியே பள்ளிநீ யெழுந்தரு ளாயே

09. நீராடி நெற்றியில் நீறிட்டு நின்னடியார்
நின்திருக் கோலந்தான் தரிசிக்க நின்றார்
பாராளும் பரமன் தன் பாகத்தாய் பராபரையே
பல்லுயிரும் படைத்துக் காக்கும் புரந்தகியே
தாரணியே தயாபரியே தத்துவமான பொருளே
தாரகைகள் தாமகன்று தரணியிது விழித்ததுவே
ஆரணியே அற்புதமே அல்லாதன அகற்றும்
அருமருந்தே பள்ளிநீ யெழுந்தரு ளாயே

10. போற்றியெம் பெண்ணரசி மனோன்மணித் தாயே
போற்றி நின்னெழிற் புன்னகைகாண வந்தோம்
போற்றியெம் தான்தோன்றித் தாயே நின் பொற்பாதம்
போற்றி பண்டார புலமதில் வந்தவளே
போற்றிநின் பெருங்கரு ணைசேர் கயல்கள்
போற்றி யலைசிந்தும் கரையோரம் எழுந்தவளே
போற்றிடும் தேவாதி தேவர்க்கும் அரியவளே
போற்றி நீபள்ளி யெழுந்தரு ளாயே.

**பண்டிதர்.க.ஈஸ்வரநாதபிள்ளை.**

## தான்தோன்றி ஸ்ரீமனோன்மணி அம்மை

# கும்மி

01. கும்மி யடியுங்கள் கும்மி யடியுங்கள்
கூடிக் கும்மி யடியுங்கடி
அம்மை மனோன்மணி யாளைப் பாடி
அசைந்து கும்மி யடியுங்கடி

02. எம்மைக் காத்திட வந்தவளே யென்று
ஏந்திழையரே கும்மி யடியுங்கடி
மங்களமான மனோன்மணி மங்கையைப் பாடி
மகிழ்ந்து கும்மி யடியுங்கடி

03. தான்தோன்றி வந்தெம்மைத் தாங்கிடும் தாயைத்
தாளமிட்டுப் பாடிக்கும்மி யடியுங்கடி
வான்புகழ் பண்டார புலத்தினைப் பாடி
வளைந்து கும்மி யடியுங்கடி

04. தேரேறி வருமெங்கள் தேவியை வாழ்த்தி
தேன்மொழியீர் கும்மி யடியுங்கடி
பேரூராம் நாரந்தனைப் பதிதனைப் பாடிப்
பெண்களே கும்மி யடியுங்கடி

05. கடலோரம் குடிவந்த காரிகையைப் பாடிக்
கன்னியரே கும்மி யடியுங்கடி
மடலவிழ் தாழைசேர் நாரந்தனையைப் பாடி
மங்கையரே கும்மி யடியுங்கடி.

**பண்டிதர்.க.ஈஸ்வரநாதபிள்ளை**

நீ நேர்மையுடன் இரு, தைரியமாக இரு, எந்த நெறியானாலும் அதைப் பக்தி சிரத்தையுடன் பின்பற்று. அப்போது நீ இறைவனை அடைவது உறுதி.

தான்தோன்றி ஸ்ரீமனோன்மணியம்மைக்குச் சூட்டும்
## நவரத்தின மணிமாலை

### காப்பு

நவகோணத் துள்ளிருக்கும் நாரணியாம் மனோன்மணிக்கு
நவரத்தின மாலைபாடி நான்சூட்டி மகிழ்வதற்கு
நவமணிமகு டஞ்சூடும் நற்குஞ்சரமே விநாயகா
நவநவமா யென்நாவில் நின்று நீ கட்டுரையே.

*1.* *பையரவம் குடைபிடிக்கும் மனோன்மணித் தாயே*
*பைந்தொடியே தான்தோன்றி யம்மையே நாமெல்லாம்*
*நைந்து போகாமல் நலிவுறாமற் காத்தருளும்*
*நாயகியே நாகமாய்க் கடலிலே தோன்றிய*
*தையலே யெம்தவமே தண்ணளி தருபவளே*
*தக்கவழி யெமக்குத் தந்தவளே தரணியிலே*
*கைம்மாறு ஏதம்மா கற்பகமே சொல்லிடுவாய்*
*கன்னலே வைடூரியமே தான்தோன்றி யம்மையே.*

*2.* *நிலத்திலே கற்பாறை யின்கீழ்நீ தவமிருந்தாய்*
*நின்னடியார் தவமாக நீயெழுந்து வந்தாய்*
*தலமிலா வூரினிலே தலமொன்று கண்டாய்*
*தக்கபடி பூசைகளும் விழாக்களும் கொண்டாய்*
*நலமான சைவநெறி தழைத்தோங்க வந்தாய்*
*நங்கையே நம்மிடர் நீங்கிடவே வந்தாய்*
*குலமெலாம் வாழ்விக்கக் குமரிநீ வந்தாய்*
*குன்றாத மாணிக்கமே தான்தோன்றி யம்மையே.*

*3.* *பரமசிவன் பாகத்தாய் பராசக்தித் தாயே*
*பரவெளியில் தரிசிக்கும் ஞானிகளின் வாழ்வே*
*வரமருளி வையத்தை வாழ்விக்கும் அன்னையே*
*வளமான நாரந்தனைப் பதியிற் தோன்றி*
*உரமான சித்திரத் தேரேறி வருபவளே*
*உன்னடியே சரணமென்று சார்ந்தோரைத் தாயே*
*கரங்கொடுத் துக்காப்பாற்றும் கற்பகமே கருணைக்*
*கடலே மரகதமே தான்தோன்றி யம்மையே.*

*4.* *வேதத்தின் வித்தே விண்ணோரும் அறிவரிய*
*விமலியே விடையூரும் பெம்மான் பாகத்தாய்*
*நாதத்தின் வடிவான நாயகியே நாரணியே*
*நாரந்தனைப் பதியின் வாழ்வே மனோன் மணியே*
*ஏதமெலாம் நீக்கியெமை ஏந்திழையே காத்திடம்மா*
*என்றென்றும் உன்காவல் வேண்டியே உன்தன்*
*பாதமலர் சரணடைந்தோம் பராசக்தி பவதாரணியே*
*பங்கயமே நன்முத்தே தான்தோன்றி யம்மையே*

5. பிறவிப் பிணியகற்றும் பிஞ்ஞகன் தன் தேவியே
பெருமாற்கும் ஐயமிட்ட பெருமாட்டி நீயன்றோ
திறமான பெருவாழ்வு தருகின்ற தாட்சாயிணி
தித்திக்கும் மதுரமொழித் தையலே தாரணியே
இறவாத பேரறிவு இன்னமுதே நீ தருவாய்
இகபர இன்பமவை இருஞ்சுடரே ஈந்திடுவாய்
உறவாக நின்றெம்மை உய்விக்கும் மனோன்மணியே
உல்லாசியே பவளமே தான்தோன்றி யம்மையே.

6. வயிரவர் ஏத்திடும் வராகியே வைரமணியே
வழிபடும் அடியார்தம் வறுமையை அகற்றிடுவாய்
உயிரினுள் உயிராகி உலகீன்ற மாதாவே
உன்னைச் சரணடைந்தோம் உத்தமியே கண்பாராய்
பயிருக்கு மழையாகும் பார்வதியே பகவதியே
பக்திசெய் வார்க்குன் பாதமலர் காட்டிடுவாய்
மயிலே மனோன்மணியே மாதங்கியே மடப்பிடியே
மட்டிலாப் பதந்தரும் தான் தோன்றி யம்மையே.

7. மதிசூடும் அண்ணலார் மயங்கிடும் வடிவழகே
மறையாகி மறையின் பொருளானாய் சரணம்
கதியானாய் எமக்கு நீ கண்மணி போ லானாய்
கற்பக வல்லியே சரணம் சரணம்
துதிபாடத் துன்பமெலாம் துடைத்திடும் தாயவளே
துடிபோலும் இடையுடையாய் சரணம் சரணம்
பதியான பரமன்தன் பார்வைக்கு விருந்தான
பதுமராகமே தான்தோன்றி யம்மையே சரணமம்மா

8. மாயாத வரமதனால் மருள்நீக்கும் மனோன்மணியே
மயங்கியிவ் வையத்து வாழ்வினிலே மாளாமல்
தாயாகி நின்றெம்மைத் தயாபரியே காத்திடம்மா
தங்கமாய் ஒளிர்கின்ற தத்துவப் பொருளே
சேய்களெனச் சேவித்திடும் செம்மனத் தோர்க்காகச்
செய்யவளே பண்டலபுலத்தின் வாழ்வே
தேயாத புகழ்மணக்கத் தக்கவளே வருவாய்
தேமொழியே கோமேதகமே தான்தோன்றி யம்மையே

9. மூலப் பொருளே சரணம் சரணம்
முடியா முதலே சரணம் சரணம்
கோலக் குயிலே சரணம் சரணம்
கொம்மை முலையாளே சரணம் சரணம்
நிலத் திருமேனியளே சரணம் சரணம்
நிலவே குளிரே சரணம் சரணம்
சூலம் உடையாய் வருவாய் வருவாய்
சுவையே அமுதே தான்தோன்றி யம்மையே.

பண்டிதர்.க.ஈஸ்வரநாதபிள்ளை

## நமையென்றும் காக்கும் சக்தி மனோன்மணி!

*வையகம் முற்றிலும் மகிழும் ஒரு வடிவுடன் வனப்பாய் அமர்ந்திருப்பாள்*
*வாடிடும் பக்தர்கள் வினைபோக்கி வளமான வாழ்வு தந்து அருள்வாள்*
*கசியும் உளத் தோடனைவர்க்கும் கருணை முகம் காட்டி நிற்பாள்*
*பசியும் நோயும் நெருங்காமல் பக்தர் தம்மைப் பார்த்திருப்பாள்*

*சாடும் கொடுமை எது வெனினும் சட்டென்றழித்துச் சகலர்க்கும்*
*ஈடும் இணையும் இல்லாமல் இன்னருள் பொழிவாள் மனோன்மணி*
*ஊரை உயிரை ஒரு குறையும் ஒட்டா தென்றும் காத்திடுவாள்*
*ஈரம் அவளின் இதயத்தில் என்றும் ஊறி ஊறிவரும்*

*நாடிச் சென்று அவள் பாதம் நயந்து வணங்கும் அடியவர்க்கு*
*தேடி அருளைப் பொழிந்து நிற்கும் தெய்வ சக்தி அவளாவாள்*
*ஆதி சக்தி மனோன்மணி, அருளும் சக்தி மனோன்மணி*
*நீதி என்றும் நிலையாக நிறுத்தும் சக்தி மனோன்மணி*

*தீது நீக்கி நலமெல்லாம் சேர்க்கும் சக்தி மனோன்மணி*
*யாதுமாகி நின்றுதவும் ஞானசக்தி மனோன்மணி*
*கவலைகள் போக்கி நமையென்றும் காக்கும் சக்தி மனோன்மணி*
*கரங்கள் குவித்து வணங்கிடுவோம் நமைக் காத்திடுவாள் மனோன்மணி*

*வேறு*

*அழுகின்ற கண்ணுடன் ஆவலாய் வந்து*
*அன்னையின் கால்கள் பற்றி*
*ஆவலாய்த் தூக்குவாள் என்கின்ற ஆசையில்*
*அவள் முகம் நோக்கும் சேயை*

*விழுகின்ற வண்ணமாய் விரட்டாது அன்புடன்*
*விரைந்து அவனைத் தூக்கி உடனே*
*விழிநீர் துடைத்து விசும்பல் போக்கி*
*வேதனை தீர்ப்பாள் அது போல்*
*மெழுகென்று உருகியே நின்பதம் மேவினேன்*
*மேலான என் பக்தி கண்டே*
*மெய்யான அன்னை போல் மீறிடும் அன்புடன்*
*விரைந்தென்னை அணைத்திடுவாய்*
*நாடிடும் பக்தரின் துயரெலாம் போக்கிட*
*நாரந்தனை யெனும் பதியிலே*
*நல்லருள் பொழிந்திடும் சுடரான தெய்வமே!*
*நற்சோதியே! மனோன்மணியே!*

**கவிஞர் த.துரைசிங்கம்**

உ
சக்தி துணை

# உயிரெழுத்தில் அம்பிகை துதி

*"அருளினைத் தந்த அம்பிகையே போற்றி!*
*ஆறறிவைத் தந்த மனோன்மணித் தாயே போற்றி!*
*இருளினைப் போக்கிய ஈஸ்வரியே போற்றி!*
*ஈடில்லா வாழ்வு தந்த இறைவியே போற்றி!*
*உன் பாதம் சரண் அடைந்தோம் உத்தமியே போற்றி!*
*ஊழ்வினை அகற்றிடும் உத்தமச் செல்வியே போற்றி!*
*எம்வினை போக்கிடும் எழில் அரசியே போற்றி!*
*ஏரியின் அருகினிலே எமக்காக உதித்தவளே போற்றி!*
*ஐயங்கள் தீர்த்திடும் அகிலாண்டேஸ்வரியே போற்றி!*
*ஒளிமயமாய் நிற்கும் அலங்காரத் தாயே போற்றி!*
*ஓராயிரம் வரங்கள் அளித்திடும் பண்டாரபுலத்தாயே போற்றி!*
*ஔடதமாய் நிற்கும் அன்னையே போற்றி! போற்றி!!!*

நாரந்தனை
**இ.விக்கினேஸ்வரன்**

## செய்யக்கூடாதது

- "புண்ணிய தீர்த்தங்களில் (குளம், ஆறு, கடல்) வந்தவுடன் காலை வைக்கக் கூடாது.
- முதலில் அந்தப் புண்ணிய தீர்த்தத்தை தலையில் தெளித்துக் கொண்ட பின் காலை வைக்க வேண்டும்.
- காறித்துப்பக் கூடாது.
- ஆடையின்றிக் குளிக்கக் கூடாது.
- மலசலஅசுத்தங்களைச் செய்யக்கூடாது.
- குளத்தில் கல்லைப் போடக்கூடாது.

உ
சக்தி துணை

# நல்லருளைத் தாருமம்மா

*நாரந்தனை வடக்கமர்ந்த*
*நாயகியே! மனோன்மணியே!*
*தான் தோன்றியாய் விளங்கித்*
*தாயாக நிற்பவளே!*

*உன்றன் திருக்கோலமென்*
*உள்ளத்தில் தெரியுதம்மா*
*உன்னருள் துணையிருக்க*
*உலகிலெனக் கேது துன்பம்!*

*பல தெய்வம் இருந்தாலும்*
*பரம்பரையாய் என், குலத்தார்*
*குலதெய்வம் என்றுன்னைக்*
*கும்பிட்டார் குலம்காக்க*
*வருந்தெய்வம் நீ என்றே*
*வாயார வாழ்த்துகின்றேன்*
*தலம் சிறக்க ஊர் சிறக்கத்*
*தண்ணருளைத் தந்திடுவாய்!*

*கடலோரம் வீற்றிருந்து*
*கருணை மழை பொழிந்திடுவாய்*
*விழியோரம் பார்த்தெங்கள்*
*வேதனைகள் விலக்கிடுவாய்*
*அகதிகளாய் உன்னடியார்*
*அலையும் நிலை மாறி*
*நிம்மதியாய்ப் பெருமூச்சு*
*நினைத்தூரைத் தொடும்படியாய்*
*சம்மதிக்க வைக்காயோ*
*சாந்தியளித் தருளாயோ!*

***சு.இராமலிங்கம***

குறிப்பு: அம்பிகை மக்களுக்கு காட்சியளித்த (1951)
50வது வருட நிறைவையொட்டி (2001) வெளியிட இருந்த மலருக்கு அன்றைய நிலையில் எழுதப்பட்டது.

## எங்கள் தெய்வம்

ஆயிரம் தெய்வங்களை வணங்கினாலும் மனசுக்குள் குலதெய்வத்துக்கு என்று தனி மதிப்பு உண்டு. எந்த ஊரில், எந்த தேசத்தில் இருந்தாலும் வருடம் ஒரு முறையாவது நம் குலதெய்வம் குடியிருக்கும் (எங்கள் ஊர்) கோயிலுக்குச் சென்று வழிபடுவதில் இருக்கும் ஆனந்தம் பக்தி சொல்லிலடங்காது)

உ
சக்தி துணை

## நாரந்தனை தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பிகை மேல் பாடப்பட்ட 108 போற்றிகள்.

திருச்சிற்றம்பலம்

ஓம் அருளுருவாகி வந்த
அம்மையே போற்றி
ஓம் ஸ்ரீ அன்னை மனோன்மணி
யானாய் போற்றி
ஓம் அலைகடலோரத்தில்
அமர்ந்தாய் போற்றி
ஓம் அனுதினம் அருணனுதயம்
காண்பாய் போற்றி
ஓம் அந்தணர் போற்ற
அமர்ந்தாய் போற்றி
ஓம் அடியார் உள்ளத்தில்
உறைபவளே போற்றி

ஓம் அருமறையாகி
இருப்பவளே போற்றி
ஓம் அறவழி வாழ்வினைத்
தருபவளே போற்றி
ஓம் அன்பினுக் கரசியாயி
ருப்பவளே போற்றி
ஓம் அனைத்துலகத்திற்கும்
அன்னையே போற்றி
ஓம் ஆதி சிவனின் பாதியே
போற்றி
ஓம் ஆக்கமும் அழிவும்
புரிவாய் போற்றி
ஓம் ஆணவத்தினை அழிப்பாய்
போற்றி

ஓம் ஆபத்தில் அபயம்
அளிப்பாய் போற்றி
ஓம் ஆதரவும் எமக்குத்
தருவாய் போற்றி
ஓம் ஆதிசக்தியாய்
அமர்ந்தாய் போற்றி
ஓம் ஆனந்தவல்லித் தாயே
போற்றி
ஓம் ஆறுமுகனை அளித்தாய்
போற்றி

ஓம் ஆவணித் திங்களில் பவனி
வருபவளே போற்றி
ஓம் ஆராதனை செய்வார்க்கு
அருளுபவளே போற்றி

ஓம் இவ்வுலகம் யாவும்
ஆனாய் போற்றி
ஓம் இன்பமும் துன்பமு
மானாய் போற்றி
ஓம் இல்லற இன்பமும்
தருபவளே போற்றி
ஓம் இருவினை தன்னை
அறுப்பாய் போற்றி
ஓம் இன்பவடிவான
இறைவியே போற்றி

ஓம் ஈடிணையில்லா எம்
தாயே போற்றி
ஓம் ஈசன் துணைவியே எம்
தாயே போற்றி
ஓம் ஈரநெஞ்சினர் இதயத்தில்
இருப்பாய் போற்றி
ஓம் ஈழத்துத் துன்பங்கள்
துடைப்பாய் போற்றி
ஓம் ஈங்கோர் அமைதியை
அருள்வாய் போற்றி

ஓம் உறுதுணையாக
இருப்பவளே போற்றி
ஓம் உண்மையின்
வடிவே போற்றி
ஓம் உயர்வின் சிகரமே
போற்றி
ஓம் உன்னை நாடியே
வருவோம் போற்றி
ஓம் உவந்தினி தருள்வாய்
தாயே போற்றி
ஓம் உய்யும் வழிதனைக்
காட்டுவாய் போற்றி

பொன் மலர்

ஓம் உயிரினுக்கு உயிரான
தாயே போற்றி
ஓம் உத்தமர்கள் வாழ்த்தித்
துதிப்பர் போற்றி
ஓம் உனக்கோர் உவமை
யில்லாய் போற்றி
ஓம் உறைவிடமாக ஈங்கு
அமர்ந்தாய் போற்றி

ஓம் ஊக்கமும் உயர்வும்
தருவாய் போற்றி
ஓம் ஊழ்வினை நீக்கி
அருள்வாய் போற்றி
ஓம் ஊழி முதல்வன்
உமையே போற்றி
ஓம் ஊனையும் உயிரையும்
காப்பவளே போற்றி
ஓம் ஊழிக்காலத்தின்
தலைவியே போற்றி
ஓம் எண்திசையும் வென்றாய்
போற்றி
ஓம் எங்கள் ஊர் ஏற்றமுற
வந்தாய் போற்றி
ஓம் எண்ணிலும் எழுத்திலும்
இருப்பாய் போற்றி
ஓம் எங்கள் மனத்திலும்
அமர்வாய் போற்றி
ஓம் ஏழைக்கும் இரங்கி
அருள்வாய் போற்றி

ஓம் ஏதம் தீர்க்கும் எந்தாய்
போற்றி
ஓம் ஏறுடை ஈசன்
துணைவியே போற்றி
ஓம் ஐங்கரத்தான் அன்னையே
போற்றி
ஓம் ஐம்பூதங்களின் ஆற்றலே
போற்றி
ஓம் ஐம்பொறிகளும் நீயே
போற்றி
ஓம் ஐந்தெழுத்து
மந்திரமானாய் போற்றி

ஓம் ஒப்பிலா அமுதே
போற்றி
ஓம் ஒளியும் ஒலியுமானாய்
போற்றி
ஓம் ஓம்கார நாயகியே
போற்றி
ஓம் கலைகள் யாவுக்கும்
தலைவியே போற்றி

ஓம் கற்றவர் விழுங்கும்
கனியே போற்றி
ஓம் கற்பனை கடந்த கற்பகமே
போற்றி
ஓம் கற்பிற்கு அரசியே
போற்றி
ஓம் கல்லாதார்க்கும்
அருள்வாய் போற்றி
ஓம் கண்ணீர் மல்கின்
கருணை புரிவாய் போற்றி
ஓம் கல்வி செல்வம் வீரம்
தருவாய் போற்றி
ஓம் திருமகளானாய் போற்றி
ஓம் கலைமகளானாய் போற்றி
ஓம் மலைமகளும் நீயே
போற்றி

ஓம் எங்கும் ஒன்றாய் நின்று
ஏற்றம் புரிபவளே போற்றி
ஓம் இமயத்து
அரசியே போற்றி
ஓம் ஈஸ்வரித் தாயே
போற்றி
ஓம் செந்தூரம் தரித்த
பராபரியே போற்றி
ஓம் செம்மை மனம்
தந்தருள்வாய் தாயே போற்றி
ஓம் உயிர் காக்கும்
நாரணியே போற்றி

ஓம் ஸ்ரீ சக்கரத்தாயே
போற்றி
ஓம் ஓம்கார சுந்தரியே
போற்றி

ஓம் வளமுடன் எம்மை வாழ
வைதாயே போற்றி
ஓம் கனகாம்பிகையே
போற்றி
ஓம் பராசக்தியே போற்றி
ஓம் தையல் நல்லாளே
போற்றி
ஓம் நோயற்ற வாழ்வினைத்
தருவாய் போற்றி
ஓம் சிவகாம சுந்தரியே போற்றி
ஓம் சிவயோக நாயகியே
போற்றி
ஓம் துன்பம் துயரம்
துடைப்பாய் போற்றி
ஓம் செந்தமிழ்த்தாயே போற்றி
ஓம் தண்டமிழ் தாயே போற்றி
ஓம் தீந்தமிழ்ச் சுவையே போற்றி
ஓம் கலைஞானம் தருவாய்
அருள்வாய் தாயே போற்றி.
ஓம் திரிபுரை சுந்தரியே போற்றி
ஓம் தவத்தின் தலைவியே போற்றி
ஓம் நாவின் கிழத்தியே போற்றி
ஓம் நல்லனவெல்லாம் தருவாய்
தாயே போற்றி

ஓம் பசுபதி நாயகியே போற்றி
ஓம் இன்சொல்லளிக்கும்
இறைவியே போற்றி
ஓம் ஆவின் கிழத்தியே போற்றி
ஓம் ஆன்ம சுத்திதனை
தருவாய் போற்றி
ஓம் அமுத நாயகியே போற்றி
ஓம் அருள்நிறை அம்மையே போற்றி
ஓம் அற்புத நாயகியே போற்றி
ஓம் அருளும் பொருளும்
தருவாய் போற்றி
ஓம் அபிராமித் தாயே போற்றி
ஓம் நல்ல நாயகியே போற்றி
ஓம் பக்தர் தம் திலகமே போற்றி
ஓம் பரிவுடன் எம்மைக்
காப்பாய் போற்றி
ஓம் நாரந்தனைப் பதி
நாயகியே போற்றி
ஓம் ஸ்ரீமனோன்மணித் தாயே
சரணம் சரணம் சரணம்

திருச்சிற்றம்பலம்

இயற்றியவர்:
**திருமதி.சிவமலர் மன்மதகாந்தன்,**
**(ஆசிரியை)**
நாரந்தனை.

## ஏழுநற்குணங்கள்

ஏழ்மையிலும் நேர்மை
கோபத்திலும் பொறுமை
தோல்வியிலும் விடாமுயற்சி
வறுமையிலும் பரோபகாரம்
துன்பத்திலும் தைரியம்
செல்வத்திலும் எளிமை
பதவியிலும் பணிவு.

உ
சக்தி துணை

# சைவப் பெண்களின் பணி

இன்றைய உலகில் வளர்ந்து வரும் விஞ்ஞான அறிவும் பொருளாதார வீக்க தூக்கமும் மனிதனை ஆட்டிப் படைக்கத் தொடங்கிவிட்டன. நாளும் உலகியற் பிரச்சினைகளில் உழலும் மக்கள், அருளியலைப் பற்றிச் சிந்திக்கவோ, உயிருக்கு ஆக்கம் தேடவோ முடியாத நிலை உருவாகிவிட்டது. அன்பும் சிவமும் ஆட்சி செய்த நம் அகங்களிலும் இந்த நிலை புகுந்து விட்டதென்றால் மறுப்பதற்கில்லை. எனவே சைவப் பெண்களின் சமயப் பணி முன்னையிலும் பார்க்க கடுமையானதும், அவசியமானதுமாகின்றது.

சைவத் தமிழ்ப் பெண்மைக்கு உயர்வு தந்து எமக்கு கலங்கரை விளக்கமாகத் திகழும் பெண்மணிகளாம் மங்கையற்கரசியார், திலகவதியார், காரைக்கால் அம்மையார் போன்றவர்களின் வாழ்வும், தொண்டும் எமக்கு வழிகாட்டிகள். அந்த நிலையை எட்ட இயலாதாயினும், நம்மால் ஆவன செய்து சைவத்தை வளர்த்து, நம்மவரைக் காக்க வேண்டியது அவசியம்.

"ஈன்று புறம் தருதல் என்தலைக் கடனே" என்றாள் புறநானூற்றுத்தாய். இந்த அளவோடு இன்றைய தாய் நின்று விடமுடியாது. சான்றோன் ஆக்குதலும் அவள் கடனாகவே இருக்கின்றது. புத்தகப் படிப்பு மட்டும் நம் குழந்தைகளைச் சைவத் தமிழ் மக்களாக வளர்க்கமாட்டாது. சமயப்பற்று, சமய அறிவு, பெற்றோரைப் பேணல், பெரியோரை வணங்கல், ஆதியாம் சிறந்த அத்திவாரத்தில் உருவான கட்டிடமாக அமைய வேண்டும். இளையோர் உள்ளத்தில் பசு மரத்தாணி போல் பதிய வேண்டிய பண்பு, ஒழுக்கம், பணிவு, சைவப்பற்று இவற்றை வளர்ப்பது தாய்மாரின் தலையாய கடனாகும்.

குழந்தைகளை காலையும், மாலையும் தேவார திருவாசகங்களை பாடச்செய்து நாமும் கூடிய வரை அவர்களுடன் இருந்து பாட வேண்டும்.

பல தாய்மார்கள் தங்கள் பிள்ளைகள் நல்ல முறையில் உண்பதில்லை. படிப்பதில்லை என்றெல்லாம் குறைபட்டதைக் கேட்டிருக்கின்றோம். இக்குறைகளை இலகுவாகத் தீர்க்கலாமென நினைக்கின்றேன். பெரியவர்கள் செய்பவற்றை உன்னிப்பாகக் கவனித்து தாமும் அதேபோல் செய்ய முனையும் பண்பு குழந்தைகளுக்கு இயல்பாகவே உண்டு. நாம் தேவாரம் பாடினால் அவர்களும் பாடுவார்கள். நாம் படிக்கும் போது எழுத்தறியாத சின்னஞ்சிறு குழந்தைகளும் ஏதாவதொரு புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு ஏதேதோ பேசுவதைக் காண்கின்றோம். இவை நல்லதோர் தொடக்கம். குழந்தைகளைத் தட்டிக் கொடுத்து இப்பழக்கத்தை வளர்ப்போமானால் பின்னுக்கு நல்லதோர் அடி கோலியவர்களாவோம்.

வீட்டில் இருக்கும் பெரியவர்கள் செய்யும் அத்தனையும் குழந்தைகளின் கவனத்தை ஈர்க்கின்றன. தாய், தந்தையர் பிறரைப் போற்றுவதையும், தூற்றுவதையும் குழந்தைகள் செவிமடுத்து, அப்படியே செய்வதை நாம் காண்கின்றோம். எனவே வருங்கால இளையோர்கள் சைவத்தமிழ்ச் செல்வங்களாக வளர வேண்டுமானால் கடவுள் பக்தியும், ஆலயத் தொண்டும், அடியார் பக்தியும் நம்மிடையே வளர வேண்டும்.

வீட்டை அலங்கரிக்க எத்தனையோ முறைகள் உண்டு. மேல் நாடுகளுக்கும் சென்று படித்து வருகின்றார்கள். பூக்களை எல்லாம் எப்படி எப்படி அடுக்கி அழகுபடுத்துவதென்றெல்லாம் படிக்கின்றார்கள்.

"நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் அவள் தாள் நினை" என்பது எம் வாழ்வு. இதற்கேற்ற முறையில் வீட்டை அலங்கரிக்க வேண்டும். நாம் வணங்கும் தெய்வங்களின் அருள்தரு கோலங்காட்டும் அழகிய படங்களால் வீட்டை அலங்கரிக்க வேண்டும். நாம் எந்நேரமும் அவளை நினைக்க வேண்டும். பெண்மணிகளின் சமயப் பணி வீட்டில் மட்டுமன்றி வெளியிலும் வேண்டப்படுகின்றது.

*இன்றைய உலகில் எத்தனை, எத்தனையோ விதமான பூக்கள் உள்ளன. இவற்றையெல்லாம் நாம் பயன்படுத்த வேண்டும். "பூக்கள் எல்லாம் பொன்னார் திருவடிக்கே" ஆக வேண்டும். ஆதலால் நாம் தினமும் பூக்களைப் பறித்து, மாலையாக்கி, அம்பிகைக்குச் சாத்த உதவவேண்டும். ஆலயங்களில் நடைபெறும் உற்சவ காலங்களில் மலர்களை மாலையாக்கி மாலைகளாலேயே அலங்கரிக்க உதவவேண்டும்.*

*பெண்களாகிய நாம் பண்ணார் இன்தமிழ் இசைத்தும் ஆலய நலன் தேடி உழைக்கும் தொண்டர்களாகியும், பணிபுரிதல் இன்று அவசியமாகின்றது. மாதர் சங்கங்களை உருவாக்கி, இந்த வழிகளில் இயங்கிப் பணிபுரிதல் சாலச்சிறந்தது.*

*இன்றைய நிலையில் நாம் தேவார திருவாசகங்களைப் பிழையின்றி ஓதவும், சிறுவர்களைக் கொண்டு ஓதுவிக்கவும் முன்வர வேண்டும். குழந்தைகளைச் சைவமும், தமிழும் தாங்கும் தூண்களாக வளர்க்க வேண்டியது பெண்களாகிய நமது கடமையாகும்.*

**திருமதி.லோகேஸ்வரி வைரவநாதன** B.Sc
நோர்வே.

"ஆவலால் எமக்காம் மலர் மரங்கள் ஆக்கல், அம்மலர் பறித்திட்டு
தளர்விலா வகை தார் பல சமைத்தல், மேவும் ஆலயம் அழகிடல்,
மெழுகல், விளங்க நல் விளக்கிடுதல்,
......................................................................................"

கடவுள் ஒவ்வொரு ஜீவனிலும் குடி கொண்டிருக்கிறார். இதைத் தவிர தனியாக வேறு ஒரு கடவுள் இல்லை. இந்த உண்மையை எவ்வளவோ தத்துவங்களுக்குப் பிறகு நாம் புரிந்து கொண்டிருக்கிறோம்.

உ
சக்தி துணை

# நாரந்தனை தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள்
# ஆலய வரலாறு

***அறிமுகம்:***

*கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது சான்றோர் வாக்கு. ஆனால் தீவுப்பகுதியில் பெரும்பாலான இடங்களில் இன்றைய நிலையில் குடியில்லாத ஊரில் கோயில் இருக்கின்ற நிலை என்றாகிவிட்டது.*

*இலங்கைத் தீவின் வடபால் யாழ்ப்பாணக் குடாநாட்டிற்கு தென்மேற்கே நீண்ட பெரும் நிலப்பரப்பாக இருப்பது லைடன் தீவாகும். அத்தீவில் பல கிராமங்கள் குக்கிராமங்கள், சிறுபட்டினம் ஆங்காங்கே சேவை மையங்கள் என விசாலித்து, சைவத்தையும், தமிழையும் வளர்த்து வரும் பூமியாக திகழ்கின்றது. இங்கே வடக்கே கடலையும், தெற்கே சிறு ஏரியையும் கிழக்கே சரவணைக் கிராமத்தையும். மேற்கே கரம்பன் கிராமத்தையும் எல்லைகளாகக் கொண்டு. நிலவளம், நீர்வளம், கடல்வளம் செழித்த கிராமமாக திகழ்கின்றது நாரந்தனைக் கிராமம்.*

*போர்த்துக்கீசர் இந்நாட்டிற்கு வருவதற்கு முன்னர் இக்கிராமம் மட்டுமல்லாது சகல தீவுகளிலும் சைவம் தழைத்தோங்கி இருந்ததற்கான சான்றுகள் தெளிவாகவுள்ளன. அதற்குச் சான்றாக அமைவது எமது கிராமத்தில் தோன்றிய அம்மன் விக்கிரகமாகும்.*

*நாரந்தனைக் கிராமத்தில் இந்து, கிறிஸ்தவ மக்கள் வேற்றுமை உணர்வுகள் அற்ற வகையில் சகோதரத் தத்துவத்தைப் பேணி வருகின்ற நிலையே தொடர்கின்றது. இங்கு ஆறு இந்துக் கோயில்களும் மூன்று கிறிஸ்தவ கோயில்களும் உள்ளன. இரண்டு சைவப் பாடசாலைகளும் ஒரு கிறிஸ்தவ பாடசாலையும் இயங்கி வருகின்றன. ஒரு கிறிஸ்தவ பெண்கள் பாடசாலை நாட்டில் ஏற்பட்ட இடப்பெயர்வு காரணமாக மூடப்பட்டுவிட்டது.*

***1991ம் ஆண்டின் பின்னர்:***

*1991ம் ஆண்டு தரை வழியால் யாழ் குடா நாட்டைச் சென்றடையக் கூடிய லைடன் தீவு, புங்குடுதீவு, மண்டைதீவு, காரைநகர் ஆகிய பிரதேசங்களில் வாழ்ந்து வந்த மக்களின் தூண்டப்பட்ட இடம் பெயர்வானது. இப்பிரதேசங்களின் சமூக பொருளாதார பண்பாட்டுக் கோலங்களை பெரிதும் பாதித்துவிட்டது என்பது உண்மையே. வயல் வெளிகள் வனாந்தரமாகிவிட்டன. குளங்கள் வாய்க்கால்கள் தூர்ந்துவிட்டன. வீடுகள் வளவுகள் வெறுமையாகி பாழடைகின்றன. வீதிகள் பாதைகள் மரஞ்செடிகளால் சூழ்ந்துவிட்டன. வசதி படைத்த மக்களின் உள்வரவு கானல் நீராகிவிட்டது. ஆனால் இப்பிரதேசங்களில் எழுந்தருளியிருக்கும் கோவில்களுக்கு புனருத்தாரணங்கள், கும்பாபிஷேகங்கள், அபிஷேகங்கள், அன்னதானங்கள் புதிய சித்திரத் தேர் அமைத்தல் என்பன தொடர்ச்சியாக நிறைவேற்றப்பட்டு வருகின்றன. இவையாவும் இப்பிரதேசங்களிலிருந்து சர்வதேசங்களுக்கு புலம் பெயர்ந்தவர்களின் உதவிகளினாலும் மற்றும் உள்நாட்டில் இடம் பெயர்ந்த வசதியுடையவர்களின் உதவிகளினாலும் இங்கே இருக்கின்ற அடியார்களின் விடாமுயற்சிகளினாலும் செயல்படுத்தப்படுகின்றன எனலாம்.*

*இந்த நிலையில் நாரந்தனை தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயமும் மக்களின் தூண்டப்பட்ட இடப்பெயர்வினால் பெரிதும் பாதிக்கப்பட்டதாயினும் ஆலய அடியார்களின் அரும்பெரும் முயற்சியினால், தற்போது முடிந்தளவுக்கு நாளாந்த செயற்பாடுகள் செவ்வனே நடைபெற்று வருகின்றன.*

**ஆலய வரலாறு:**

நாரந்தனை தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயத்தின் வரலாறு ஐம்பது (50) ஆண்டுகளாக இருந்த போதிலும் இந்த அற்புத அம்பாளின் திருவடியினை வணங்கும் மக்களின் அயராத உழைப்பின் விளைவாக, இன்று இக்கிராமத்தவர்களுக்கு மட்டுமல்லாது தீவக மக்களின் காவல் தெய்வமாக இருந்து எம்மை எல்லாம் அருள் பாலித்து வருகின்றாள்.

நாரந்தனை வடக்கு கடற்கரையோரம் சார்ந்த நிலப்பரப்பு அரசுக்குச் சொந்தமான முடிக்குரிய நிலமாக இருந்தது. அங்கே சிறு சிறு பற்றைகளும் முட்செடிகளும் ஆவரசு மரங்களும், தாழைமரங்களும் செறிந்திருந்தன. அத்துடன் கற்பாறைகளும், முருகக்கற்களும் செறிந்த நிலப்பரப்பாக காட்சியளித்திருந்தன. இந்நிலப்பரப்பு மாரிகாலங்களில் இப்பிரதேசத்தைச் சார்ந்த மக்களின் கால்நடைகளுக்கான மேச்சல் நிலமாகப் பயன்படுத்தப்பட்டது.

அக்காலங்களில் வீதிகளைச் செப்பனிடும் பணி ஓவசியர்மார்களின் பணியாக இருந்தது. அரச காணிகளில் கற்களைக் கிளறி எடுத்து வீதிகள் செப்பனிடப்பட்டது. அந்த வகையில் ஊர்காவற்றுறைப் பிரதேசத்துக்கு ஓவசியராக இருந்தவர் கரம்பனைச் சேர்ந்த திரு.துரைநாயகம் ஓவசியராவார். அவர் வீதிகளைச் செப்பனிடுவதற்கு அரச அதிபரின் அனுமதியுடன் 1951ம் ஆண்டு பங்குனி மாதம் நாரந்தனை மேற்கைச் சேர்ந்த திரு.மனவற்பிள்ளை, திரு.துரைசாமி ஆகிய இருவரையும் வேலைக்கமர்த்தி கல் அகழப்பட்டது. அப்போது அங்கு பெரிய பாறாங்கல் ஒன்று அவர்களுக்கு தென்பட்டது. அவற்றினை உடைத்து எடுப்பதில் இருவரும் சிரமப்பட்டனர். முடிந்தளவும் முயற்சித்தும் அக்கல் உடைந்த பாடில்லை. பின்னர் அதனை வெடி வைத்து உடைக்க வேண்டிய நிலை அவர்களுக்கு ஏற்பட்டது. அப்போது கலீர் என்ற சத்தத்துடன் பாறை பிளந்தது. அந்தக் கல்லின் கீழ் ஒரு விக்கிரகமும், பழைய காலத்து நாணயங்களும் இருக்கக் கண்டனர். அவ்விக்கிரகத்தை எடுத்துப் பார்த்த போது ஆறு அங்குல உயரமும், நாலு அங்குல அகலமுடைய தங்கத்தினாலான அம்பாள் விக்கிரகமாக இருந்ததை உணர்ந்தனர். கல்லுடைத்தவர்கள் தேங்காய் உடைத்து கற்பூர தீபம் காட்டி வணங்கியது மட்டுல்லாது அயலில் உள்ள மக்களுக்கும் தெரியப்படுத்தவே அவர்களும் அங்கு வந்து வழிபட்டனர். இருந்த போதிலும் அரச காணியில் காணப்பட்டதால் அதுபற்றி அக்காலத்தில் நாரந்தனை கிராமத்துக்கு பொறுப்பாக இருந்த விதானையார் திரு.அல்பிறட் அவர்களுக்கு அறிவிக்கவே அவர் அப்போதைய தீவுப்பகுதி காரியாதிகாரியான திரு.செ.சிவஞானம் அவர்களுக்குத் தெரியப்படுத்தினார்.

மேற்படி விடயமானது அரசின் கவனத்துக்குக் கொண்டுவரப்படவே புதைபொருள் ஆராய்ச்சி திணைக்களத்துக்கு அவ்விக்கிரகம் ஒப்படைக்கப்பட்டது.

அதனை யாழ்ப்பாணத்தில் இயங்கிவந்த யாழ். நூதனசாலையில் மக்கள் பார்வைக்காக வைத்திருந்தனர். பின்னர் நாட்டில் நிலவிவந்த அசாதாரண சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு கொழும்பு நூதனசாலைக்கு எடுத்துச் சென்றுவிட்டார்கள்.

**கொட்டில்:**

நாரந்தனைக் கிராமத்தையே ஆச்சரியப்படத்தக்க வகையில் நிலத்தில் புதையுண்டு காணப்பட்ட விக்கிரகம் பற்றியே மக்களிடையே பேச்சாக இருந்தது. இப்பிரதேசத்தில் அம்மன் குடிகொண்டு அருளாட்சி செய்துள்ளார் என மக்கள் எண்ணினர். இதன் விளைவாக நாரந்தனை வடக்கு சைவ மக்கள் ஒன்று கூடி அம்மன் சிலை தோன்றிய இடத்தில் கொட்டில் அமைத்து, நாரந்தனை வடக்கைச் சேர்ந்த திரு.கு.அருளம்பலம் அவர்களின் கைவண்ணத்தால் கல் அகழும் போது தோன்றிய அம்மன் சிலையைப் போன்று, திரைச்சீலையில் வடிவமைத்துக் கொடுக்க அத்திரைச்சீலையை கொட்டிலில் கட்டிவிடவே மக்கள் அங்கு சென்று வழிபடத்தொடங்கினர். ஆரம்பத்தில் அவ்விடத்துக்கு அருகாமையில் வசித்து வந்தவரான திரு.ச.உலகநாதபிள்ளை

அவர்கள் விளக்கு வைத்து வந்தார். அவரைத் தொடர்ந்து அவ்விடத்தைச் சேர்ந்த திரு.ஆ.கனகரத்தினம் அவர்கள் அதனை மேற்கொண்டு செவ்வாய், வெள்ளி தினங்களில் கற்பூர தீபாராதனை செய்து வந்தார். இச்சந்தர்ப்பத்தில் கடலில் கண்டெடுக்கப்பட்ட கல்லில் அமைந்த நாகமும் கொண்டு வரப்பட்டு கொட்டிலில் வைக்கப்பட்டது. மக்கள் தினமும் வழிபடத் தொடங்கினர். வெள்ளி, செவ்வாய் தினங்களில் பொங்கல் பொங்கி படைத்து வணங்கி பசனையிலும் ஈடுபட்டனர். சிறிது காலத்தின் பின் திரு.க.ஈஸ்வரநாதன் அவர்கள் பொறுப்பெடுத்து சிறப்பாக பூசை செய்து வந்தார். அவர் 1958ம் ஆண்டு ஆடி மாதம் வரை மேற்கொண்டு வந்தார்.

**கல்லில் அமைந்த நாகம்:**

அற்புத அம்பாளாக மக்களின் நம்பிக்கைக்குரிய மனோன்மணி அம்பாள் கண்டெடுத்த அதே ஆண்டில் சில நாட்களின் பின்னர் இதே இடத்தைச் சேர்ந்த திரு.மு.கந்தையா அவர்களுக்கு அம்பாள் கனவில் தோன்றி "நாளை நீ என்னைக் கடலில் காண்பாய்" எனக் கூறிச் சென்றார். மறுநாள் காலை கடற்கரைக்குச் சென்று கடலில் தேடிப் பார்த்த போது முருகக்கல்லிலான இரண்டு தலைகள் உடைந்த நிலையில் மூன்று தலைகளுடனான நாகபாம்பு உருவில் ஒரு விக்கிரகம் இருப்பதைக் கண்டார். இச்செய்தியை அவ்விடத்து மக்களுக்கு தெரியப்படுத்தவே. அன்று பிற்பகல் அவர்களும் இணைந்து அதனை எடுத்து வந்து ஏற்கனவே அமைக்கப்பட்டிருந்த கொட்டிலில் வைத்து பூசை, அபிஷேகங்கள் நடாத்தி வழிபட்டு வரலாயினர். 1953ம் ஆண்டு வீசிய புயல் காற்றினால் கொட்டில் சரிந்தது. அதனால் நாகத்தின் ஒரு தலை உடையலாயிற்று. எஞ்சிய இரண்டு தலைகளுடனான நாகவிக்கிரகம் இன்றும் ஆலய முன்மண்டபத்தில் வைக்கப்பட்டு அபிஷேகங்கள், பூசைகள் நடைபெற்று வருகின்றன.

**சைவமகாசபை:**

அருள் தெய்வமான அற்புத அம்பாளுக்கு நிரந்தரமான ஆலயம் அமைக்க வேண்டுமென மக்கள் பேரவாக் கொண்டனர். அதனை முன்னின்று செயலாற்றுவதற்கு ஓர் அமைப்பு வேண்டுமெனக் கருதினர். இவ்வார்வத்தை அறிந்த அதிபர் திரு.க.கணபதிப்பிள்ளை அவர்கள் (கரவருடம் வைகாசி மாதம்) 1951ம் ஆண்டு வைகாசி மாதம் 20ந் திகதி நாரந்தனை வடக்கு சைவசமய மக்களை கணேச வித்தியாசாலையில் ஒன்று கூட வைத்து அவர்களின் அபிப்பிராயங்களைக் கேட்டறிந்தார். அவர்கள் யாவரும் அம்பாளுக்கு கோயில் கட்டவேண்டுமென்பதில் உறுதியாக இருந்தனர். அன்றைய தினமே "சைவமகா சபை" என்ற பெயரில் ஓர் அமைப்பு உருவாக்கப்பட்டது. இச்சபையின் போஷகராக சைவப் பெரியார் திரு.மு.மயில்வாகனம் ஆசிரியர் அவர்களை முன்னிறுத்தி, பின் வருவோர் கொண்ட நிருவாக சபையைத் தெரிவு செய்தனர். அதன் பிரகாரம் கீழ்க் கண்டோர் தெரிவாகினர்.

தலைவர் - திரு.தம்பு தில்லைநாதர் அவர்கள்

உபதலைவர் - திரு.வைத்திலிங்கம் தம்பு அவர்கள்

காரியதரிசி - திரு.கந்தையா கணபதிப்பிள்ளை அதிபர் அவர்கள்

உபகாரியதரிசி - (தெரியவில்லை)

பொருளாளர்- திரு.விசுவலிங்கம் நமசிவாயம் அவர்கள். இவர்களுடன் நிர்வாக உறுப்பினர்களும் தெரிவு செய்யப்பட்டனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

**நிரந்தரமான ஆலயம்:**

அம்பாளுக்கு நிரந்தரமான ஆலயம் அமைப்பதற்கு அரசாங்கத்திடமிருந்து நிலத்தைப் பெற வேண்டும். அதுவே சைவ மகா சபையின் முதற் செயற்பாடாகும். அதன் காரணமாக ஏழுபேர்

கொண்ட குழு நியமிக்கப்பட்டு அவர்கள் அரச அதிபரைச் சந்தித்து இரண்டு ஏக்கர் நிலத்தைப் பெற்றனர். (அம்பாள் தோன்றிய இடத்தை மையமாக வைத்துப் பெறப்பட்டது)

1954ம் ஆண்டு அம்பாள் தோன்றிய இடத்தை மையமாக வைத்து கோயில் கட்ட வேண்டியிருந்ததால் அவ்விடத்தில் இருந்த கொட்டிலை அகற்றி வடக்குப் பக்கம் தள்ளிப் போடப்பட்டது. மக்கள் அவ்விடத்தில் வணங்கி வரலாயினர். சபையினரால் கோயில் கட்டுவதற்கான ஆரம்ப பணிகள் முழுமூச்சுடன் நடைபெற்று வந்தது. அச்சுவேலியைச் சேர்ந்த பிரம்மஸ்ரீ.குமாரசாமி குருக்கள் அவர்களை அழைத்து அம்பாள் தோன்றிய இடத்தை மூலஸ்தானமாகக் கொண்டு நிலையம் பிடிக்கப்பட்டது. அவரால் வரைந்து தரப்பட்ட மாதிரி அமைப்பின் பிரகாரம் கட்டிட வேலைகள் ஆரம்பிக்கப்பட்டது.

1954ம் ஆண்டு தை மாதம் 26ம் திகதி (ஜய வருடம் தை மாதம்) நாரந்தனை வடக்கைச் சேர்ந்த திரு.மூத்ததம்பி செல்லப்பா அவர்களால் கட்டிட ஆரம்பத்துக்கான அத்திவாரக்கல் நாட்டப்பட்டது.

கோவிலின் கட்டுமானப் பணிகள் துரித வேகத்தில் நடைபெற்றது. மூலஸ்தான ஸ்தூபியையும் அதில் அமைந்துள்ள சிற்பங்களையும், சுருவிலைச் சேர்ந்த நா.தங்கவேல் ஸ்தபதி அவர்கள் தன் கைவண்ணத்தால் மிகவும் சிறப்பாக செய்து முடித்தார். அவை இன்றும் அப்படியே உள்ளன. ஆலயத்தில் பிரதிஷ்டை செய்திருக்கும் கருங்கல் விக்கிரகங்கள், ஐம்பொன்னாலான எழுந்தருளி விக்கிரகங்கள் பெரிய மணி ஆகியன தாவடியைச் சேர்ந்த திரு.நா.சோமசுந்தரம் (சோமு) ஸ்தபதி அவர்களின் கைவண்ணத்தில் உருவானவையே.

**குடியேற்றம்:**

அரச காணிகளை மக்களுக்கு பகிர்ந்தளிக்கும் திட்டத்திற்கமைய ஆலயத்திற்கு வழங்கப்பட்ட நிலப்பரப்புக்கு தெற்குப் பக்கமாகவுள்ள நிலப்பரப்பை ஒரு குடும்பத்துக்கு அரை ஏக்கர் வீதம் பதினாறு குடும்பங்களுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டது. இத்திட்டம் 1954ம் ஆண்டு நடைபெற்றது.

ஆலயத்துக்கு வழங்கப்பட்ட காணிக்கும் மக்களுக்கு வழங்கப்பட்ட காணிக்குமிடையே ஒன்றரை ஏக்கர் நிலம் எஞ்சி இருந்தது.

சைவ மகா சபையினர் அரச அதிபருடன் தொடர்பு கொண்டு இடைப்பட்ட நிலப்பரப்பை கோயில் நிலத்துடன் சேர்த்தனர். அதன் பிரகாரம் ஆலயத்துக்கு மூன்றரை (3 1/2) ஏக்கர் நிலம் கிடைத்ததையிட்டு மக்கள் மகிழ்ச்சியடைந்தனர்.

**கும்பாபிஷேகம் I :**

நாரந்தனை மக்களின் காவல் தெய்வமான அற்புத அம்பாள் குடிகொள்ள கோயில் அமைக்கப்பட்டது. சைவமகா சபையினர் அம்பிகையை ஆலயத்தில் பிரதிஷ்டை செய்து வைக்க ஆர்வம் கொண்டு இணுவில் சிவஸ்ரீ.கு.இராமநாதக்குருக்களைச் சந்தித்து, கும்பாபிஷேகம் செய்யும் விடயத்தைக் கூறி அவரையே பிரதம குருவாகக் கொண்டு நடாத்த நிச்சயப்படுத்தி, அவரைக் கொண்டே நாளும் குறிப்பிட்டனர்.

1958ம் ஆண்டு ஆவணி மாதம் 20ந் திகதி சுவாதி நட்சத்திரத்தை கும்பாபிஷேக நாளாகக் கொண்டு சகல ஏற்பாடுகளும் நடைபெற்று முடிந்திருந்த வேளை ஆரம்ப கிரியைகள் ஆரம்பமாவதற்கு இரண்டு, மூன்று தினங்களுக்கு முன்னதாக நடக்கக் கூடாத ஒன்று நடைபெற்றது. ஆலயச் சூழலில் குடியேற்றத் திட்டத்தில் இராயப்பு என்பவர் மரணத்தைத் தழுவிக் கொண்டார். அவரைப் பரிசோதித்த டாக்டர் அவரது இறப்புக்கு அம்மை நோயே காரணம் என அறிவித்துவிட்டார். அதனால் சுகாதாரப் பகுதியினர் நாரந்தனை வடக்குப் பகுதியை அம்மை நோய்ப் பிரதேசமாக

பொன் மலர்

பிரகடனப்படுத்தி மக்கள் நடமாட்டங்களையும் கட்டுப்படுத்திவிட்டனர். அத்துடன் நின்றுவிடாது ஆலய கும்பாபிஷேகத்தையும் ஒத்திவைக்குமாறு சுகாதாரப் பகுதியினரால் அறிவிக்கப்பட்டது.

சைவமகாசபையினரும் மக்களும் செய்வதறியாது திகைத்தனர். இக்கிராமத்துக்கு ஏன் இந்த நிலை என எண்ணிய கும்பாபிஷேக பிரதம குருக்கள் சிவஸ்ரீ. கு. இராமநாதக்குருக்கள் சைவமகாசபை நிர்வாகிகளையும் அழைத்துக் கொண்டு யாழ்ப்பாணத்தில் சுகாதார அத்தியட்சகரை அணுகி கும்பாபிஷேகத்தை குறித்த நாளில் நடாத்தி வைப்பதற்கு ஆவன செய்யுமாறு வினயமாக வேண்டிக் கொண்டனர். இவர்களின் கோரிக்கையினை செவிமடுத்த அதிகாரி கும்பாபிஷேகத்தை மிகக்குறைந்த எண்ணிக்கையான பத்தர்களுடன் நிறைவேற்றுமாறு பணித்தார். அத்துடன் தானும் பொருளுதவி புரிந்து அனுப்பினார்.

மேற்படி கும்பாபிஷேகம் விளம்பி வருடம் ஆவணி மாதம் 4ம் திகதி (20.08.1958) புதன்கிழமை சுவாதி நட்சத்திரத்தில் வெகுசிறப்பாக நடைபெற்றது. அதனைத் தொடர்ந்து நாற்பது நாட்கள் அபிஷேகங்கள் நடைபெற்றன. இவை மக்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது.

அன்னையின் கிருபையினாலே பீடித்திருந்த நோய் கும்பாபிஷேகத்துக்கு முன்னரே கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரப்பட்டது. மக்களை அச்சுறுத்திய அம்மை நோய் ஓடி மறைந்தது. அன்னையின் அருளை வியந்த சுகாதாரப் பகுதியினர் ஒரு நாள் அபிஷேகத்தினை தங்கள் பொறுப்பில் செய்தனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

### பூசகர்

அம்பிகையின் கும்பாபிஷேகம் இனிதே நிறைவுற்று அபிஷேகங்கள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தன. அம்பிகைக்கு நாளாந்த பூசைகள் செய்வதற்கு நிரந்தரமாக ஐயர் தேவையென சைவ மகாசபையினரும், மக்களும் சிந்தித்தனர். அதனையொட்டி குருக்கள் ஐயாவிடம் விண்ணப்பித்தனர். அவர் அப்பொறுப்பினை தானே ஏற்றுக் கொண்டு தனது இரண்டாவது புதல்வரான ஸ்ரீதரசர்மா அவர்களை ஒழுங்கு செய்து கொடுத்தார்.

ஸ்ரீதரசர்மா அவர்கள் தனது கன்னி (ஆரம்ப) பூசையை அம்பாள் ஆலயத்தில் ஆரம்பித்தார். தினமும் இரண்டு வேளையும் செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் மூன்று வேளையும் பூசைகள் நடைபெற்றன. இவரது நேரம் தவறாத பூசை முறைகளாலும் அன்னையை அழகுபடுத்தும் கைவண்ணத்தினாலும் அம்பிகையின் அருள் பிரகாசித்தது. அடியார்களின் வரவும் அம்பிகை தரிசனமும் சிறப்பாகவே இருந்துள்ளன என்றால் மிகையாகாது. சிவஸ்ரீ.கு.இராமநாதக்குருக்கள் அவர்கள் நாரந்தனைக்கும் உரித்துடையவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

### எழுந்தருளி அம்பாள்:

அம்பாள் விக்கிரகம் கண்டெடுக்கப்பட்டு எட்டு ஆண்டுகளுக்குள்ளே ஆலயம் அமைத்து அம்பிகையை பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்து ஒன்பதாவது வருடத்தில் அலங்காரத் திருவிழாக்கள் நடைபெற ஆரம்பித்ததென்றால் அது நாரந்தனை தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயத்தினையே குறிப்பிடலாம். இதற்கு சபையினரின் விடாமுயற்சியும் மக்களின் ஒத்துழைப்புமே காரணமாகும். இதற்கு முன்னோடியாகநாரந்தனையைச் சேர்ந்த திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் அவர்கள் தனது உபயமாக ஐம்பொன்னினால் உருவாக்கப்பட்ட எழுந்தருளி அம்பாளை 1959ம் ஆண்டு ஆவணி மாதம் வழங்கினார்.

இவ்வம்மன் மண்கும்பான்பிள்ளையார் கோவிலிலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு வேலணை பெருங்குளம் முத்துமாரி அம்மன் ஆலயம், புளியங்கூடல் மகாமாரிஅம்மன் கோயில், சுருவில் ஐயனார் கோயில், ஊர்காவற்றுறை சிவன் தேவஸ்தானம், நாரந்தனை கந்தசுவாமி கோயில் ஆகிய கோவில்களில் வைக்கப்பட்டு ஊர்வலமாக ஆலயத்துக்குக் கொண்டு வரப்பட்டது. அந்த

ஆண்டே அலங்காரத் திருவிழாக்கள் நடைபெற்றன. அதனைத் தொடர்ந்து வருடாவருடம் அலங்காரத் திருவிழாக்கள் 1975ம் ஆண்டு வரை நடைபெற்று வந்தன.

**ஸ்ரீமகாமேருயந்திரம்:**

ஆலய பிரதம குருக்கள் சிவஸ்ரீ.கு.இராமநாதக்குருக்கள் ஐயா அவர்கள் ஆலயத்துக்கு வருகை தரும் அடியார்களுக்கு மகாமேருயந்திரத்தின் மகிமை பற்றியும், அவற்றினைப் பூசிப்பதால் கிடைக்கக் கூடிய பலன்கள் பற்றியும் எடுத்துக் கூறுவது வழக்கம். இதில் லயப்பட்ட திரு.சு.பத்மநாதன் சிவனேசம் தம்பதியினர் 1963ம் ஆண்டு ஐம்பொன்னால் வார்க்கப்பட்ட ஸ்ரீமேருயந்திரத்தினை ஆலயத்துக்கு தங்களின் உபயமாக வழங்கினார்கள்.

ஸ்ரீசக்கரமேருயந்திர பூசை இலங்கையில் முனிஸ்வரத்துக்கு அடுத்தாற் போல் தான் தோன்றி அம்மன் கோவிலில் தான் நடைபெறுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

ஸ்ரீசக்கரபூசை அலங்காரத் திருவிழாக்காலத்தில் நடைபெற்று வந்தது. 1976ம் ஆண்டு கொடியேற்றத் திருவிழா நடைபெற்றதால், அவ்வேளையில் ஸ்ரீமேருயந்திரபூசை செய்ய முடியாதென்பதால், நவராத்திரி விழாவின் போது நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டு நடைபெற்று வந்தன. 1990ம் ஆண்டு முதல் நடைபெறவில்லையென்பது குறிப்பிடத்தக்கது.

**தேர்த்திருப்பணி சபை:**

தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளுக்கு ஒரு சித்திரத் தேர் அமைக்க வேண்டுமென ஆர்வம் கொண்ட அடியார்கள் பராபவ வருடம் புரட்டாதி மாதம் 14ம் நாள் (30.09.1966) வெள்ளிக்கிழமை ஆலய மண்டபத்தில் ஒன்றுகூடி தேர்த்திருப்பணி சபையினை அமைத்தனர். திருப்பணிச் சபையினர் கலை நிகழ்ச்சிகளை நடாத்தியும் அடியார்களிடம் அன்பளிப்பாகவும் பணத்தினைப் பெற்று ஆரம்ப வேலைகளை முடுக்கிவிட்டனர். பின்னர் 1970ம் ஆண்டு இத்திருப்பணிச்சபையின் பொறுப்பினை சைவமகாசபை பொறுப்பேற்றுக் கொண்டது.

**சித்திரத்தேர்:**

சைவமகாசபையினர் திருநெல்வேலியைச் சேர்ந்த திரு.செ.கந்தசாமி ஸ்தபதியாரைச் சந்தித்து, தேருக்குத் தேவைப்படும் செலவுகள் பற்றி கலந்துரையாடி ஒரு இலட்சம் ரூபா செலவில் செய்து முடிப்பதெனவும் ஒப்பந்தம் செய்யப்பட்டது.

1970ம் ஆண்டு ஆடிமாதம் 13ம் திகதி சுபவேளையில் ஸ்தபதியார் நாள் வேலையை ஆரம்பித்து தானும் குழுவினரும் ஆலயத்தில் தங்கியிருந்து தேர் கட்டுமானத்தைப் பூர்த்தி செய்தனர்.

தேருக்குரிய பவளக்கால், மணிகள், முடி என்பனவற்றை தனித்தனி உபயங்களாக அன்பர்கள் செய்து கொடுத்தார்கள்.

நளவருடம் ஆவணி மாதம் 20ம் நாள் (05.09.1976) ஞாயிற்றுக்கிழமை வெள்ளோட்டம் நடைபெற்றது. ரூபா முப்பதினாயிரம் செலவில் தேர்முட்டியும் அமைக்கப்பட்டதென்பதும் குறிப்பிடத்தக்கது.

**கும்பாபிஷேகம II:**

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கும்பாபிஷேகம் செய்ய வேண்டுமென்பது விதி எனினும் குறித்த காலத்தில் அதனைச் செய்து வைக்க முடியாது போகினும் பதினைந்தாவது ஆண்டில் இரண்டாவது கும்பாபிஷேக நிகழ்வினை அன்னை மனோன்மணிக்கு நடாத்தப்பட்டது.

*ஆலயத்தில் புனருத்தாரண வேலைகள் மேற்கொள்ளப்பட்டு புதிதாக வைரவர் கோயில் அமைக்கப்பட்டு பிரமாதீச வருடம் ஆவணி மாதம் 17ம் நாள் (02.09.1973) புனருத்தாரண மகா கும்பாபிஷேகம் வெகு சிறப்பாகவும் கோலாகலமாகவும் நடைபெற்றது.*

**கொடிமரம்:**

*அம்பாளுக்கு கொடி ஏற்றி மகோற்சவம் நடைபெற்று தேர் பவனி வரவேண்டுமென அடியார்கள் அவாவுற்றனர். அதன் பிரகாரம் தேர் உருவாகிவிட்டது. கொடிமரம் வேண்டும் என சபையினர் ஆலோசிக்கும் வேளை நாரந்தனை வடக்கைச் சேர்ந்த திரு.வை.நகுலேசபிள்ளை அவர்கள் முன்வந்து செப்புத்தகட்டால் ஆன கொடி மரத்தை நிறுவ உதவினார். அம்பிகையை பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் நடைபெற்ற 18வது வருடமாகிய நளவருடம் ஆவணி மாதம் 12ம் நாள் (28.08.1976) சனிக்கிழமை கொடியேற்ற விழா சிறப்பாக நடைபெற்றது.*

*1990ம் ஆண்டின் பின்னர் கவனிப்பார் யாருமில்லாததால் கொடிமரம் பழுதடைந்துவிட்டது. தற்பொழுது 1ம் உபயகாரர் திரு.மு.சபாநாதன் அவர்களால் புதிதாக நிறுவப்பட்டு கொடியேற்ற விழா நடைபெற்று வருகின்றது.*

**அலங்கார உற்சவங்களும் மகோற்சவங்களும்:**

*அன்னை மனோன்மணி சுயம்பு வடிவில் தோன்றி மக்களுக்கு காட்சியளித்த 25வது வருடமும், அன்னையை பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் நடைபெற்ற 18வது வருடமுமாகிய 1976ம் ஆண்டில் புதிய கொடிமரம் நிறுவப்பட்டு புதிய சித்திரத்தேர் வீதி வலம் வந்ததும் இவ்வளவு குறுகிய காலத்தில் நடைபெற்றதென்றால் அது தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயத்தில் தான் எனக் குறிப்பிடலாம். அம்பிகைக்கு 1959ம் ஆண்டு முதல் அலங்கார உற்சவங்கள் ஒன்பது தினங்கள் நடைபெற்று பத்தாவது நாள் தீர்த்தத் திருவிழா நடைபெற்றது.*

*அம்பாளின் தீர்த்தத்திருவிழா கடலில் நாகம் தோன்றிய இடத்தில் தான் நடைபெறுவதாகும். அலங்கார திருவிழா காலத்தில் இரவுப் பூசையின் போது ஸ்ரீமகாமேருயந்திர பூசை நடைபெற்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.*

*அம்பிகையின் அலங்கார உற்சவங்கள் பதினேழு வருடங்கள் வெகு சிறப்பாக நடைபெற்று வந்தது. 1976ம் ஆண்டு மகோற்சவம் ஆரம்பமானது. நளவருடம் ஆவணி மாதம் 12ம் நாள் (28.08.1976) சனிக்கிழமை கொடியேற்றத்துடன் ஆரம்பமாகி ஒன்பது தினங்கள் மகோற்சவம் நடைபெற்று பத்தாவது நாள் நளவருடம் ஆவணி மாதம் 21ம் நாள் (06.09.7976) திங்கட்கிழமை அம்பாள் தனது புதிய சித்திரத்தேரில் முதன்முதலாக வீதி உலாவந்து மக்களுக்கு காட்சியளித்து அருள்பாலித்தாள். பதினோராம் நாள் தீர்த்தத் திருவிழா அம்பாளின் தீர்த்த விழா சமுத்திர (கடலில்)த்தில் நடைபெறுவது என்பதும் குறிப்பிடத்தக்கது.*

**எழுந்தருளி விநாயகர் முருகன்:**

*அம்பிகைக்கு கொடியேறி தேர்த்திருவிழா நடைபெற ஆரம்பித்ததும் அம்பாளுக்கு பக்கங்களில் சேர்ந்து வீதியுலா வருவதற்கு அம்பிகையின் பிள்ளைகள் இல்லையே என அடியார்கள் சிந்திக்கையில் நாரந்தனையைச் சேர்ந்த திரு.செ.ஜெயபாலன் புண்ணியவதி (ஆசிரியை) தம்பதியினர் ஐம்பொன்னாலான பிள்ளையார் விக்கிரகத்தை தங்கள் உபயமாக அன்பளிப்புச் செய்தார்கள். நாரந்தனை சரவணையைச் சேர்ந்த திரு.சு.சிவநாதன் கனகரூபவதி தம்பதியினர் ஐம்பொன்னாலான வள்ளி தெய்வானை சமேத முருகப்பெருமானை தங்கள் உபயமாக அன்பளிப்புச் செய்தார்கள்.*

மகோற்சவ காலங்களில் கொடியேற்றத் திருவிழா, தேர்த்திருவிழா, தீர்த்தத்திருவிழா ஆகிய மூன்று தினங்களில் மட்டுமே மூவரும் வீதி உலா வருவார்கள். மற்றைய தினங்களில் அம்பிகையே வீதி உலா வருவார். விநாயகர், முருகன் வசந்த மண்டபத்தில் வீற்றிருப்பார்கள். இந்த நடைமுறை இன்றும் நடைமுறையில் நடந்து வருகின்றது என்பதும் குறிப்பிடத்தக்கது.

**மகோற்சவ பூசை:**

யாழ் குடா நாட்டில் நல்லூரிலும், தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயத்திலும் மட்டுமே வசந்த மண்டப பூசை நடைபெற்ற- பின் ஸ்தம்ப (கொடிமரம்) பூசை நடைபெற்று வருகின்றது. 1976ம் ஆண்டு முதல் ஆரம்பத்திலேயே இம்முறை கையாளப்பட்டு 1989ம் ஆண்டு வரை நடைமுறையில் இருந்தது. இடம் பெயர்வுகளின் பின்னர் 1998ம் ஆண்டுக்குப் பின் ஸ்தம்ப பூசையின் பின்னர் வசந்த மண்டப பூசை நடைபெற்று வருகின்றது.

**கும்பாபிஷேகம்** III:

1989ம் ஆண்டு ஆலயத்தில் நடைபெற வேண்டியிருந்த திருத்த வேலைகளைப் பூர்த்தி செய்து, உள்வீதியில் விநாயகர், முருகன், சந்தான கோபால், நவக்கிரக மூர்த்திகள், சண்டேசுரர் ஆகிய தெய்வங்களுக்கு ஆலயம் அமைத்து பிரதிஷ்டை செய்து சுக்கில ஆண்டு ஆனித்திங்கள் 26ம் நாள் (10.07.1989) திங்கட்கிழமை அத்த நட்சத்திரத்தில் மூன்றாவது கும்பாபிஷேக நிகழ்வு வெகுவிமரிசையாக நடைபெற்றது. பத்திரிகைகளில் கும்பாபிஷேக சிறப்பு மலர்களும் வெளியிடப்பட்டன.

அம்பிகையின் அடியார்களின் வேண்டுகோளின்படியும் சைவமகாசபையினரின் தீர்மானத்தின்படியும் இவ்வாண்டு மகோற்சவம் ஆடி மாதத்திற்கு மாற்றப்பட்டது. ஆடிப்பூர (பூரம்) நட்சத்திரத்தன்று தீர்த்தத் திருவிழாவாகக் கொண்டு மகோற்சவங்கள் ஆரம்பமாகி நடைபெற்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.

பின்னர் நாட்டில் ஏற்பட்ட இடப்பெயர்வின் விளைவாக மகோற்சவங்கள் பல ஆண்டுகள் நடைபெறவில்லை.

**1990 - 1995 ஆம் ஆண்டு காலப்பகுதி:**

1990ம் ஆண்டு ஆவணி மாதம் 24ம் திகதி இராணுவ நடவடிக்கையின் விளைவாக திருவிழாக்கள் நடைபெறவில்லை. 1991ம் ஆண்டு சித்திரை மாதம் 27ம் திகதி மீண்டும் ஆரம்பிக்கப்பட்ட இராணுவ நடவடிக்கைகளின் விளைவாக ஒட்டு மொத்தமாக வெளியேறி பண்ணையூடாக யாழ்குடா நாட்டுக்கு இடம் பெயர வேண்டிய நிலை உருவாகவே அன்னை மனோன்மணி அம்பாள் அடியார்களிடமிருந்து அன்னியப்படுத்தப்பட வேண்டிய துர்ப்பாக்கிய நிலை உருவானது. ஆலயத்தில் பூசைகள் இல்லை. விளக்கு வைப்பார் யாருமில்லை. ஆலயத்தின் உள்வீதி, வெளிவீதிகள், புதர், செடி கொடிகளால் மூடப்பட வேண்டிய நிலை தோன்றியது. அன்னையிடம் சரணடைய முடியாத அடியார்கள் 1991-1995ம் ஆண்டுகளிடையில் அம்பாளை பிரதிஷ்டை செய்த நன்னாளை யாழ் கச்சேரி - நல்லூர் வீதியில் வீற்றிருக்கும் புவனேஸ்வரி அம்பாள் ஆலயத்தில் அம்பிகையின் பெயரால் அபிஷேகங்கள் பூசைகள் வருடந்தோறும் வெகு சிறப்பாக நடாத்தப்பட்டன என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

**மீளக்குடியமர்த்தல்:**

1991ம் ஆண்டு சித்திரை மாதம் ஆரம்பிக்கப்பட்ட இராணுவ நடவடிக்கை காரணமாக மக்கள் ஒட்டு மொத்தமாக வெளியேறினர். 1996ம் 1997ம் ஆண்டு காலப் பகுதியில் மக்கள் சொந்த இடங்களுக்குப் போய் மீளக் குடியமரும் சந்தர்ப்பம் உருவானது. அக்காலப்பகுதியில் நாரந்தனை மக்கள் சிறு எண்ணிக்கையானோர் போய்க் குடியமர்ந்தனர்.

**கும்பாபிஷேகம்** *IV:*

*நாரந்தனையில் மீளக்குடியமர்ந்த மக்கள் அம்பிகையின் நிலை கண்டு அம்பிகைக்கு விளக்கு வைக்க வேண்டும் பூசைகளை ஆரம்பிக்க வேண்டும் என எண்ணி ஒன்று கூடி நிர்வாகத்தைப் புதுப்பித்து செயற்படத் தொடங்கினர். உள்ளூர், வெளியூர் வெளிநாடுகளில் வாழும் மக்களிடம் நிதி சேகரித்து ஆலய திருத்த வேலைகள் யாவும் பூர்த்தி செய்து வெகுதானிய வருடம் ஐப்பசித் திங்கள் 16ம் நாள் (02.11.1998) திங்கட்கிழமை உத்தரட்டாதி நட்சத்திரத்தில் நாலாவது மகா கும்பாபிஷேகத்தினை மிகவும் சிறப்பாகச் செய்து முடித்ததன் பயனாக தொடர்ந்து வருடாவருடம் மகோற்சவங்கள் நடைபெற்று வருகின்றன. முன்பு வசந்த மண்டபபூசையின் பின்பு தான் ஸ்தம்ப பூசை நடைபெற்றது. தற்பொழுது ஸ்தம்ப பூசையின் பின் வசந்த மண்டப பூசை நடைபெற்று வருகின்றது என்பதும் குறிப்பிடத்தக்கது.*

**அன்னதான மடமும் அன்னதானமும்:**

*சரவணை மேற்கைச் சேர்ந்த வர்த்தகரான திரு.இ.பாலசிங்கம் அவர்கள் அம்பிகையின் அடியார்களுக்கு அமுதளிக்க வேண்டுமென ஆர்வம் கொண்டு சைவமகா சபையினருடன் தொடர்பு கொண்டு ஆலயத்துக்கு வடக்குப் பக்கத்தில் சிறிய அன்னதான மடத்தினைக் கட்டி பத்தாவது நாளாகிய தீர்த்தத் திருவிழாவின் போது வருடாவருடம் அன்னதானம் வழங்கி வந்தார்.*

*1976ம் ஆண்டு அம்பிகைக்கு கொடியேற்று விழா நடைபெற்று, இரதோற்சவம் நடைபெற்றது. அன்று முதல் 1989ம் ஆண்டு வரை வருடம் தோறும் தேர்த்திருவிழா தினத்தன்று அன்னதானம் வழங்கி வந்தனர்.*

*இடம்பெயர்வுக்குப் பின் சேதமடைந்த மடத்தை புனரமைப்புச் செய்து மகோற்சவ காலத்தில் அந்தந்த உபயகாரர்களின் உதவியுடன் அன்னதானம் வழங்கப்பட்டு வருகின்றது.*

*சுவிற்சலாந்தில் இடம் பெயர்ந்து வாழும் நாரந்தனையைச் சேர்ந்த திரு.கந்தையா தியாகராசா என்பவரின் உதவியுடன் அன்னதான மடம் மேலும் 50 அடி நீளம் கூட்டி கட்டப்பட்டுள்ளது.*

**விசேட பூசைகள்:**

*ஆலயத்திலே தை அமாவாசை (அபிராமிப் பட்டர் தினம்) சிவராத்திரி, சித்திராபூரணை (சித்திரகுப்தவிரதம்), ஆடிப்பூரம், நவராத்திரி, திருவெம்பாவை, வரலட்சுமி பூசை, பங்குனி உத்தரம், 12 மாத விநாயகர் சதுர்த்தி, பன்னிரண்டு மாத பூரணை ஆகிய விழாக்கள் வெகு சிறப்பாக நடைபெற்று வருகின்றன.*

**திருப்பணிகள்:**

*அம்பிகை மனோன்மணி அம்பாளுக்கு காலத்துக்குக் காலம் திருப்பணிகள் செய்யப்பட்டு வருகின்றன. ஐம்பது வருட வரலாற்றைக் கொண்ட இவ்வாலயத்தின் வளர்ச்சிக்கு உள்நாட்டிலும், சர்வதேசங்களிலும் வாழ்ந்து வரும் அடியார்கள் திருப்பணிக்காக நிதியும் பொருளுதவியும் வழங்கி வருகின்றனர். சில அடியார்கள் தனிப்பட்ட உபயங்களாகவும் செய்துள்ளார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.*

**திருப்பணிச்சேவைகள்**

*மிகக் குறுகிய காலத்தில் ஆலயம் வளர்ச்சி அடைந்து வருவதற்கு கிராம மக்களின் பொறுப்பான சேவைகளே அமைந்திருந்தன. அத்துடன் ஆரம்ப காலம் தொட்டு இன்று வரை இளைஞர்களின் பங்களிப்பே அதிகமாகக் காணப்பட்டன எனலாம். இதில் ஐயமில்லை. ஆரம்ப காலத்திலிருந்து சபையில் அங்கத்துவம் வகித்து அம்பிகையின் வளர்ச்சிக்காக பாடுபட்டவர்கள் பலர். அம்பாளுக்கு மாதாந்த பூசையை செவ்வனே செய்து வருவதற்கு குடும்பம் ஒன்று ஒரு ரூபா வீதமும், மாதாந்த பிடி அரிசியும் தரவேண்டுமெனக் கேட்டு அவற்றை சேகரித்து பூசைகள் ஒழுங்காக நடைபெற ஆவன செய்தார்கள்.*

*கிராமத்தில் உள்ள விவசாயிகளிடமிருந்து உற்பத்திப் பொருட்களான புகையிலை, மிளகாய் போன்றவற்றிலிருந்து குறிப்பிட்ட தொகையை உபயமாக வருடம் தோறும் சேகரித்து அதன் மூலம் கிடைக்கும் நிதியை திருப்பணி வேலைக்கு பயன்படுத்தப்பட்டது. இன்றும் அப்பணி நடைமுறையில் உள்ளது. அம்பிகையின் வளர்ச்சியில் ஈடுபாடு கொண்டவர்கள் பலர். அவர்களில் இன்று ஒருசிலரே இருக்கின்றார்கள். உதாரணமாக திரு.ச.பேரம்பலம் அவர்கள் சபையில் நிர்வாக அங்கத்தவராக இருந்து கிராமத்தில் ஒரு பகுதியை பொறுப்பேற்று அவ்வடியார்களிடமிருந்து பூசைக்காசு, பிடி அரிசி, புகையிலை சேகரித்துக் கொடுத்து அம்பிகையின் ஆலய வளர்ச்சிக்குப் பாடுபட்டவர். அவர் இன்று நிர்வாகத்தில் இல்லை. அவர் தனது 93வது வயதிலும் அம்பாளின் பூசைக்கு தினமும் காலையில் பூக்கள் கொண்டு போய் கொடுத்து வருகின்றார் இது கண்கூடு.*

## *அம்பிகையின் அடியார்களுக்கு அன்பான வேண்டுகோள்:*

*அம்பிகையின் ஆலயம் அமைந்து 50 வருடங்கள் நிறைவு பெறுகின்றது. இக்காலப்பகுதியில் அங்கம் வகித்த சிறந்த நிர்வாகிகளின் அயராத முயற்சியாலும், அம்பிகை மேல் பக்தி கொண்ட அடியார்களின் தாராள நிதி உதவியாலும் இளைஞர்களின் சிறந்த பங்களிப்புக்களினாலும் ஆலயம் சிறந்து விளங்கி பக்தி பரவசம் நிறைந்த ஆலயமாகத் திகழ்கின்றது.*

*இன்றைய நிலையில் இவ்வாலயத்தினை நிர்மாணிக்கப் பாடுபட்டவர்களில் பலர் எம்மிடையே இல்லை. ஒரு சிலரே தற்போது வாழ்ந்து வருகின்றார்கள்.*

*ஆலயத்தின் சுற்றுச் சூழலில் வாழ்ந்து வந்த மக்களும் நாட்டின் ஏனைய பகுதிகளுக்கும் சர்வதேச நாடுகளுக்கும் புலம் பெயர்ந்து வாழ்ந்து வருகின்றார்கள். சிறு தொகையினரே இங்கு உள்ளனர்.*

*ஆலயத்திலே பலதரப்பட்ட திருத்த வேலைகளும் புதிய (இராசகோபுரம், பிள்ளையார், முருகன் தேர், தீர்த்தக்கேணி, தண்ணீர்ப்பந்தல்) திருப்பணிகளும் நடைபெற வேண்டியுள்ளது. இத்திருப்பணிகள் அம்பிகையின் அடியார்களாகிய உங்களின் ஆதரவுடனேயே நடைபெற வேண்டியுள்ளது. ஆதலால் தனித்தோ கூட்டாகவோ சேர்ந்து திருப்பணிகளைச் செய்ய முன்வாருங்கள். தாராளமாக நிதி உதவி செய்து திருப்பணிகள் நடைபெற உதவுமாறு சைவமகாசபையினர் கேட்டுக் கொள்கின்றனர்.*

***"அம்பிகையின் அருள் யாவர்க்கும் கிடைப்பதாக"***

*சுபம்*

### இறைவனை அடைவதற்குரிய நால்வகை நெறிகள்

சமயகுரவர்கள் நால்வரும் மேற்கொண்டொழுகிய பக்தி நெறியினை இந்து சமயம் நால்வகையாகக் கூறுகின்றது.

அவையாவன:

- **சரியை** (தாசமார்க்கம்) அடிமையாயிருந்து பக்தி செய்யும் முறை திருநாவுக்கரசர் வரலாறு எடுத்துக் காட்டு.
- **கிரியை** (சற்புத்திரமார்க்கம்) மகனாக இருந்து பக்தி செய்யும் முறை திருஞானசம்பந்தர் வரலாறு சான்றாகும்.
- **யோகம** (சகமார்க்கம்) தோழனாக இருந்து பக்தி செய்யும் முறை. சுந்தரமூர்த்திநாயனார் வரலாறு கூறும்.
- **ஞானம** (சன்மார்க்கம்) ஞானநெறியில் நின்று பக்தி செய்யும் முறை. மாணிக்கவாசகர் வரலாறு சான்றாகும்.

உ
சக்தி துணை

## 1951ம் வருடம் வைகாசி மாதம் 20ம் திகதி ஆரம்பிக்கப்பட்ட சைவ மகாசபையில் ஆரம்பம் முதல் இன்று (ஆவணி 2008) வரை அங்கம் வகித்த நிர்வாக உத்தியோகஸ்தர்களின் பெயர்கள்

| தலைவர்கள் | செயலாளர்கள் | பொருளாளர்கள் |
|---|---|---|
| திரு.தம்பு தில்லைநாதர் | திரு.கந்தையா கணபதிப்பிள்ளைஆசிரியர் | திரு.விசுவலிங்கம் நமச்சிவாயம் |
| திரு.தம்பு தில்லைநாதர் | திரு.கந்தையா கணபதிப்பிள்ளைஆசிரியர் | திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் |
| திரு.தம்பு தில்லைநாதர் | திரு.கந்தையா கணபதிப்பிள்ளைஆசிரியர் | திரு.சின்னத்தம்பி மாணிக்கம் ஆசிரியர் |
| திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.ஆறுமுகம் வீரசிங்கம் | திரு.சின்னத்தம்பி கைலாயப்பிள்ளை |
| திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.வைத்திலிங்கம் சோமசுந்தரம் | திரு.சின்னத்தம்பி கனகரத்தினம் ஆசிரியர் |
| திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.வைத்திலிங்கம் சோமசுந்தரம் | திரு.சுந்தரம்பிள்ளை இராமலிங்கம் |
| திரு.நாகலிங்கம் நடராசா | திரு.செல்லத்துரை இராசதுரை ஆசிரியர் | திரு.சின்னத்தம்பி கனகரத்தினம் ஆசிரியர் |
| திரு.நாகலிங்கம் நடராசா | திரு.நாகநாதபிள்ளை சிவஞானம் | திரு.நாகலிங்கம் தேவராசா |
| திரு.நாகநாத்பிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.நடராசா சற்குணசிவம் | திரு.செல்லப்பா தவராசா |
| திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.வைத்திலிங்கம் சோமசுந்தரம் | திரு.செல்லத்தம்பி விசுவலிங்கம் |
| திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.வைத்திலிங்கம் சோமசுந்தரம் | திரு.சுந்தரம்பிள்ளை இராமலிங்கம் |
| திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.வைத்திலிங்கம் சோமசுந்தரம் | திரு.நாகலிங்கம் தேவராசா |
| திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.வைத்திலிங்கம் சோமசுந்தரம் | திரு.வேலுப்பிள்ளை நடேசபிள்ளை ஆசிரியர் |
| திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.சுந்தரம்பிள்ளை இராமலிங்கம் | திரு.வேலுப்பிள்ளை நடேசபிள்ளை ஆசிரியர் |
| திரு.நாகநாதபிள்ளை கந்தஞானி மாஸ்ரர் | திரு.சுந்தரம்பிள்ளை இராமலிங்கம் | திரு.சுந்தரம்பிள்ளை கலாதரன் ஆசிரியர் |
| 1997ம் ஆண்டுக்குப் பின்னர்:- | | |
| திரு.இராமலிங்கம் துரைசாமி | திரு.தர்மலிங்கம் சத்தியதாசன் | திரு.சிவலிங்கம் தனபாலன் |
| திரு.தர்மலிங்கம் சத்தியதாசன் ஆசிரியர் | திரு.கணபதிஜயா குலசேகரன் (றமணி) | திரு.சிவலிங்கம் தனபாலன் |
| திரு.வேலுப்பிள்ளை துரைராசா | திரு.சுந்தரம்பிள்ளை இராமலிங்கம் | திரு.வேலுப்பிள்ளை நாகராசா |
| திரு.வேலுப்பிள்ளை துரைராசா | திரு.சுந்தரம்பிள்ளை இராமலிங்கம் | திரு.சிவலிங்கம் தனபாலன் |

உ
சக்தி துணை

## சைவ மகாசபையில் 20.05.1951ம் ஆண்டு முதல் அங்கம் வகித்த உபதலைவர்கள் உபசெயலாளர்கள் விபரம்

| உபதலைவர்கள் | உபசெயலாளர்கள் |
|---|---|
| திரு.சு.சண்முகம் | திரு.சி.கைலாயபிள்ளை |
| திரு.வை.தம்பு | திரு.க.ஈஸ்வரநாதபிள்ளை |
| திரு.ஆ.முத்துத்தம்பி | திரு.பொ.கோபாலகிருஸ்ணன் |
| திரு.செ.இராசதுரை ஆசிரியர் | |
| திரு.வை.சோமசுந்தரம் | |
| 1997க்குப் பின் | |
| திரு.சி.கோபாலகிருஸ்ணன் | திரு.நா.முத்துலிங்கம் |
| திரு.சி.கோபாலகிருஸ்ணன் | திரு.கோ.சிவகாந்தன் |
| திரு.சி.கோபாலகிருஸ்ணன் | திரு.கோ.இளங்கோவன் |

மேற்படி பதவிகள் வகித்தவர்களை தெரிந்தமட்டில் குறிப்பிட்டுள்ளது.
பலரைத் தவறவிடப்பட்டிருக்கலாம். ஆகவே தெரிந்தவர்கள்
சைவமகாசபையினருக்கு அறியத் தரவும்.
மறுபதிப்பிலோ அல்லது அடுத்து வரும் மலரிலோ திருத்தி பிரசுரிக்கப்படும்

பொன் மலர்

உ
சக்தி துணை

## நாரந்தனை தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாளுக்கு வாகனங்கள் நேர்த்தியாக செய்து கொடுத்தவர்கள்

| | |
|---|---|
| 1. சிங்க(ம்) வாகனம் | திரு.தம்பிப்பிள்ளை கந்தசாமி, நாரந்தனை கிழக்கு |
| 2. தாமரைப்பூ வாகனம் | திரு.செல்லத்தம்பி விசுவலிங்கம், நாரந்தனை வடக்கு |
| 3. இடப(ம்) வாகனம் | செல்வி.சி.ரஞ்சினி, சரவணை |
| 4. நாக(ம்) வாகனம் | திரு.எஸ்.சின்னத்துரை அவர்களும், அவரைச் சேர்ந்தோரும், சரவணை, மேற்கு. |
| 5. குதிரை வாகனம் | திரு.தாமோதரம்பிள்ளை குலசேகரம்பிள்ளை, நாரந்தனை |
| 6. நாக(ம்) வாகனம் | திரு.கந்தையா சபாரத்தினம் அவர்களும், அவரைச் சேர்ந்தோரும், நாரந்தனை வடக்கு. |
| 7. மயில்வாகனம் | திரு.சுந்தரம்பிள்ளை சிவநாதன் 21 4/4பிரெட்ரிக்கா றோட், கொழும்பு 06. |
| 8. எலி வாகனம் | திரு.வீரகத்தி அருளானந்தசிவம் (நாரந்தனை தெற்கு) இத்தாலி. |
| 9. தேர்ப்பீடம் | திரு.வீரகத்தி அருளானந்தசிவம், (நாரந்தனை, தெற்கு) இத்தாலி. |
| 10. காராம்பசு வாகனம் | திரு.சிவநாதபிள்ளை தயாளன் நாரந்தனை, வடக்கு. |

## தான்தோன்றி மனோன்மணி அம்பாள் ஆலயத்தில் எழுந்தருளி விக்கிரகங்கள் செய்து வைத்தவர்கள்.

| | |
|---|---|
| 1. பிள்ளையார் | திரு.செ.ஜெயபாலன் புண்ணியவதி (ஆசிரியை) தம்பதியினர் நாரந்தனை |
| 2. அம்பாள் | திரு.நா. கந்தஞானி மாஸ்ரர் புனிதவதி தம்பதியினர் நாரந்தனை |
| 3. வள்ளி தெய்வாணை சமேத முருகப்பெருமான். | திரு.எஸ்சிவநாதன் (சோதி) கனகரூபவதி (சோதி)தம்பதியினர் நாரந்தனை, சரவணை |
| 4. ஸ்ரீமேருயந்திரம் | திரு.சு.பத்மநாதன் சிவநேசம் தம்பதியினர், நாரந்தனை. |
| 5. மாணிக்கவாசகர் | திரு.க.சிவபாலன் அவர்கள் (பாலா பிரதர்ஸ் ஊர்காவற்றுறை) கரம்பன். |

உ
சக்தி துணை

**தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலய ஐம்பது வருட நிறைவாக மலரும் பொன்மலருக்கு நிதி உதவி செய்து ஊக்கமளித்தவர்கள்.**

| | | |
|---|---|---|
| சிவஸ்ரீ.இ.ஸ்ரீதரக்குருக்கள் அவர்கள் | லண்டன் | 10000.00 |
| திருமதி.தற்பராதேவி சிவஞானலிங்கம் அவர்கள் | லண்டன் | 5000.00 |
| திரு.க.விஜயநாதன் ஆசிரியர் அவர்கள் | அவுஸ்ரேலியா | 20000.00 |
| திரு.இ.சுரேஸ்கரன் அவர்கள் | சுவிஸ் | 10000.00 |
| திரு.வே.துரைராசா அவர்கள் | நாரந்தனை | 5000.00 |
| திரு.மு.சபாநாதன் அவர்கள் | வவுனியா | 10000.00 |
| திரு.சு.உருத்திரமூர்த்தி அவர்கள் | உரும்பிராய் | 5000.00 |
| திரு.அ.சோதிலிங்கம் அவர்கள் | வவுனியா | 5000.00 |
| திரு.முத்தையா சிவசோதி அவர்கள் | வவுனியா | 5000.00 |
| திரு.சு.கோபாலசிங்கம் அவர்கள் | நாரந்தனை | 5000.00 |
| திரு.கோ.சிவகாந்தன் அவர்கள் | நாரந்தனை | 5000.00 |
| திருமதி.சாரதா கதிரேசு அவர்கள் | நாரந்தனை | 5000.00 |
| திருமதி.இந்திரா கேதாரநாதன் அவர்கள் | நாரந்தனை | 5000.00 |
| திரு. சோ. பரமேஸ்வரன் அவர்கள் | நாரந்தனை | 5000.00 |

## குணமும் குலவிளக்கும்

அன்பு, நிதானம், மனஉறுதி, சகிப்புத்தன்மை, சமயோசிதபுத்தி போன்ற ஐந்து குணங்களை ஒத்ததுதான் பஞ்சமுககுத்துவிளக்கு. பெண்களுக்கு இந்த குணங்கள் அமையப்பெற வேண்டும் என்பதற்குத்தான் குத்துவிளக்கை ஏற்றச் செய்கிறார்கள்.

உ
சக்தி துணை

# நன்றிக்குரியவர்கள்

*தான் தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலய பொன்மலர் சிறப்புடன் வெளிவர*

- *ஆசியுரைகள், வாழ்த்துரைகள், கட்டுரைகள், கவிதைகள் யாவற்றையும் ஒவ்வோர் இதழ்களாகத் தந்துதவியவர்களுக்கும்.*
- *இதழ்களை ஒன்று சேர்த்து மலராக்குவதற்கு நிதி உதவி செய்தவர்களுக்கும்.*
- *இதழ்களை ஒன்று சேர்த்து மலராகத் தந்த அச்சகத்தினருக்கும்.*
- *மற்றும் சகல வழிகளிலும் உதவி புரிந்த அனைவருக்கும்*

*அன்னையின் நல்லருள் கிடைக்க வேண்டுமென்று அம்பிகையைப் பிரார்த்தித்துக் கொண்டு உங்கள் அனைவருக்கும் சைவ மகாசபையினரின் சார்பாகவும், எனது சார்பாகவும் இதயங்கனிந்த நன்றிகள்.*

வணக்கம்

சைவமகாசபை
நாரந்தனை



**சு.இராமலிங்கம்**
**செயலாளர்.**

## ஆலயத்தின் அருட்காட்சிகள் சில....



நவக்கிரக கோயில்



சண்டேஸ்வரர் கோயில்



சந்தான கோபால் கோயில்

அம்பிகையின் பூசகராகவும், குருக்களாகவும் விளங்கிய சிவஸ்ரீ.இ.ஸ்ரீதரகுருக்கள்
2004ம் ஆண்டு நடைபெற்ற மஹோற்சவத்தின் போது...



1ம் நாள் யாகம்



ஸ்தம்ப பூசை



வசந்த மண்டப பூசை

# தேர்த்திருவிழாவின் போது அம்பிகையின் காட்சிகள்



தெற்கு வீதியில் உலா வருதல்



ஆலய முன் வாசலில்



சமுத்திர தீர்த்தம்



சமுத்திர தீர்த்தம்


நாரந்தனை
தான்தோன்றி ஸ்ரீ மனோன்மணி அம்பாள் ஆலயம்

